# செந்தமிழ்ச் செல்வி






## உள்ளுறை



சிலம்பு-ருஎ ] வள்ளுவர் ஆண்டு—உ0கரு, ஆவணி Sep. '82 [ பரல்-௧

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

## "செந்தமிழ்ச் செல்வி" உறுப்பினர்கட்கு

இத் திங்களிலிருந்து (ஆவணி) செல்வியின் 57 ஆவது சிலம்பு தொடங்குகிறது. இதுகாறும் ஆதரவு தந்துவந்த அன்பர்கள் கையொப்பத் தொகை ரூ. 16/- அனுப்பித் தொடர்ந்து உறுப்பினராகி ஆதரவு தருமாறு கேட்டுக்கொள்ளுகிறோம். இதுகாறும் கையொப்பத் தொகையினை அனுப்பாத அன்பர்கட்கு இவ்விதழ் விலைபெறு அஞ்சலில் (V. P. P.) அனுப்பப் படுகிறது என்பதையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

—ஆசிரியர்

---


"செந்தமிழ்ச் செல்வி"

ஆண்டுக் கையொப்பம் :

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம் :

உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ. 300 00

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ருள | திருவள்ளுவர் ஆண்டு உ0கங, ஆவணி<br>செப்டம்பர் 1982 | பரல் க |
|---|---|---|


# நனவாகிய கழகத்தின் கனவு: தமிழ்ப் பல்கலைக்கழகம்

தமிழ்நாட்டில் தமிழுக்கென ஒரு பல்கலைக்கழகம் அமைய வேண்டுமென்று முன்னர்ப் பலர் பலவகையான திட்டங்களைத் தீட்டியுள்ளனர். ஆனால் அண்மையில் தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் எண்ணிய எண்ணம் மட்டுமே எளிதில் நிறைவேற்றப்பட்டுள்ளது. எனினும் இத் தகைய பல்கலைக்கழகம் ஒன்றின் இன்றியமையாமையினை இற்றைக்கு அறுபது ஆண்டுகட்கு முன்னரே உணர்ந்து நம் கழகம் திட்டமிட்டது என்ற உண்மையினை ஈண்டு விளக்க விழை கிறோம்.

சைவத்தையும் தமிழையும் வளர்க்கும் நோக்கத்துடன் 1920 இல் தமிழ்ப் புத்தக வெளியீட்டுத்துறையில் ஈடுபட்ட சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் தொடங்கியபோதே அதன் நோக்கங்களுள் தமிழ்ப் பல்கலைக்கழகம் நிறுவுதலையும் ஒன்றாகக் குறிப்பிட்டுள்ளது. அது :

"நம் செந்தமிழ் மொழியினையும் சைவ சித்தாந்த உண்மைகளையும் சைவ மாணுக்கர்களுக்கு அறிவுறுத்தி, அவ்வறிவோடு அம் மாணுக்கர்களை அப்போதைய சென்னை சர்வ கலாசாலைப் பரீட்சையில் தேர்ச்சி பெறும்படி அவர்களுக்கு ஆங்கிலக் கல்வியினையும் புகட்டுவதற்குப் பல சிறிய கல்லூரிகளையும் ஒரு பெரிய கல்லூரி (A Tamil University)யையும் நிலைபெறுத்தல்'' என்பதாகும்.





கழகம் 1920இல் தமிழ்ப் பல்கலைக்கழகம் நிறுவ வேண்டு மென்ற நோக்கத்தை வெளியிட்டபோதிலும் அதை நிறுவுவதற் குரிய தமிழ் உணர்வுச் சூழலோ அல்லது போதிய பொருள் வசதி வாய்ப்புகளோ அப்போது இல்லை. தமிழ்நூல்கள் விற்பனை யும் கிடையாது. தமிழ்மொழிக்குப் பள்ளியளவிலே போதிய ஆதரவு இல்லை. தனித்தமிழ் வழியாக 'வித்துவான்' அல்லது எம். ஏ. தேர்வு எழுத முடியாத நிலை. வேறு ஏதாவது ஒரு மொழியையும் உடன் எடுத்துப் படித்தால்தான் மேற்கூறப் பெற்ற பட்டங்களைப் பெற இயலும். இந் நிலையில் தமிழுக் கெனத் தமிழ்ப் பல்கலைக்கழகம் காண்பது எவ்வாறு!

தமிழ்நூல்கள் விற்பனை அன்றிருந்த நிலையையும் தமிழா சிரியர்கள் மும்மொழி பயின்ற தொல்லையையும் 1918இல் திருச்சி யில் 'தமிழ்ப் பண்டிதர்களின் முதல் மகாநாடு' நடைபெற்றபோது அதற்குத் தலைமை தாங்கிய பேராசிரியர் டி. செல்வகேசவராய முதலியார், எம்.ஏ., அவர்கள் ஒருவாறு விளக்கியுள்ளார். (தேச பக்தன் 17—12—1918)

"தற்போதுள்ள வித்துவான் தேர்வு முறையில் மெட்ரிக் அல்லது 10வது வகுப்பு தேறி வடமொழி கற்று வித்துவானாக வரவேண்டியதிருக்கிறது. ஒருவர் மூன்று மொழியிலும் பாண்டித் தியம் பெறுவது கடினம்.

"நமது பள்ளிகளுக்குத் தமிழ்ப் பாடப்புத்தகங்களாக மேனாட் டுக் கம்பெனிக்காரர்களாகிய மாக்மில்லன், லாங்மென்ஸ், இவர் களே புத்தகங்களைப் பள்ளியில் நிரப்பி விடுகிறார்கள். நம் தமிழ் நாட்டுக் கம்பெனியொன்று ஏற்படுத்தித் தமிழ் நூல்களை அச்சிட லாகாதா" என்று அவர் கேட்டிருக்கிறார். அவர் இங்ஙனம் பேசிய பின்னரே தமிழ்நூல்களை வெளியிடுவதற்கென இக் கழகம் நிறுவப் பெற்றுள்ளது.

மேலும் அன்று தமிழ்நாடு தனித்து இயங்கவில்லை. அன் றைய நிலையில் சென்னை மாகாணம் என்பது ஆந்திரம், கேரளம், கர்னாடகம் ஆகியவற்றுடன் தமிழ்நாடும் இணைந்த மாபெரும் நிலப்பரப்பாக இருந்தது. அரசாங்க அளவில் பல மொழிகளும் பயின்று வந்த சூழ்நிலை. அந் நிலையில் தமிழ்மொழிக்கு மட்டும் தனியாகப் பல்கலைக்கழகம் நிறுவ எந்த அரசு முன்வரும்? திராவிடமாநிலங்கள் அனைத்திலிருந்தும் அரசியல் கட்சி உறுப் பினர்களும் அரசுத்தரப்பின் உறுப்பினர்களும் வந்திருந்ததால் தமிழ்ப் பல்கலைக்கழகம் என்பது கனவாகவே இருந்து வந்தது.

கழகமே தமிழ்ப் பல்கலைக்கழகம் தொடங்கியிருக்கலாமெனில் அதற்குப் போதிய பொருள் வசதியில்லை. 5,000 பங்குகளுக்குரிய 50,000 ரூபா சேர்ப்பதற்கு 26 ஆண்டுகள் ஆயின. மேலும் அந்நாளில் தமிழ்நூல் விற்பனையும் பேருதியம் தரும் சூழ்நிலையி வில்லை. கழகத்திற்கு ஓரளவு பொருள் வசதி கிட்டிய பின்னரே அஃதாவது 1960இல் தமிழ்க் கல்லூரி ஒன்றையாவது தொடங்க வேண்டுமென்று விரும்பியது. பல்லாவரத்தில் மறைத்திரு மறைமலையடிகள் வாழ்ந்த வளமனையில் அதனைத் தொடங்கத் திட்டமிட்டது. அந்நாள் சென்னைப் பல்கலைக்கழகத்துணை வேந்தர் டாக்டர் ஆ. இலக்குமணசாமி முதலியார் அவர்கள் அவ்விடத்தைப் பார்வையிட்டபின் கல்லூரிக்கு அந்த இடம் போதாதெனவும் அதைவிடப் பரந்த ஓர் இடத்தில் தொடங்க வேண்டுமென்றும் பரிந்துரை செய்தனர் ஏற்ற இடம் கிடைக்காத நிலையில் அத் திட்டத்தைக் கைவிட வேண்டியதாயிற்று.

அப்படியே தொடங்கியிருப்பினும் கல்வித்துறையில் அரசின் கொள்கை மாற்றத்தால் பாடப்புத்தகங்கள் நாட்டுடைமை யாக்கப்பட்டமையால் கழகத்தின் வருவாய் குறைந்த காரணத் தால் அதனைத் தொடர்ந்து நடத்தியிருக்க இயலாதுதான். கழகம் எளிதில் விற்பனையாகாத பழந்தமிழ் இலக்கண இலக்கிய சமய நூல்களை வெளியிடப் பாடப் புத்தகங்களிலிருந்து கிடைத்த வருவாயே பெருந்துணையாக இருந்தது. கடந்த பத்தாண்டு களாக இவ் வாய்ப்பும் அற்றுப் போயிற்று. கடந்த ஓரிரு ஆண்டு களில் தன்னாட்சிக் கல்லூரிகளும் புதிய பல்கலைக்கழகங்களும் தோன்றியபின் கல்லூரியளவிலும் பாடப் புத்தகங்களின் விற்பனை குறைந்து போயிற்று. மனோன்மணீயம், சாகுந்தல நாடகம், இலக்கிய வரலாறு போன்ற பொதுப் பாடநூல்களை வணிக நோக்கத்துடன் மட்டுமே வெளியிடுவோரின் போட்டி வேறு. இவையனைத்துமே கழகத்தின் அரிய நூல் வெளியீட்டுப் பணிக்குப் பேரிடராகவே அமைந்துவிட்டன. எனவே கழகம் எண்ணியவாறு தமிழ்ப் பல்கலைக்கழகத்தைத் தோற்றுவிக்க முடியாத நிலையே நீடிக்கலாயிற்று.

சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்மொழிக்குப் போதிய ஊக்கமும் ஆக்கமும் அளிக்கப்பெறாதிருந்த நிலையில், தமிழ் மக்கள் அனைவருமே தமிழுக்கெனத் தனிப் பல்கலைக்கழகம் நிறுவ வேண்டுமென்று விரும்பினர். 1925 ஆகஃச்டு 23இல் தஞ்சை நகரில் கூடிய தமிழ்மக்கள் கூட்டத்தில் தமிழர் பல்கலைக்கழகம் (Tamil University) தொடங்க வேண்டுமென்ற திட்டம் வகுக்கப் பெற்றது. இதுபற்றிய செய்திக் குறிப்பு 1925இல் இச் 'செந்தமிழ்ச் செல்வி'யில் (மூன்றும் தொகுதி, 413 பக்.) வெளிவந்துள்ளது.

## தமிழர் பல்கலைக்கழகம்

தமிழ்மக்களின் நன்மையைக் கருதித் தமிழ்நாட்டிற்குத் தனிப் பல்கலைக்கழகம் (யூநிவெர்சிற்றி) வேண்டுமென்று 1925 வரு. ஆகஸ்டுமீ 23உ தஞ்சை நகரில் கூடிய தமிழ் மக்கள் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. அதற்குரிய வேலையைப் பார்த்து வருவதற்காக இருபது பெயர் அடங்கிய ஒரு கமிட்டியும், அதற்குப் பெருந்தகையாளர் தமிழ் நாட்டிற்கும் வளர்ச்சித் துறைக்கும் மந்திரியாவுள்ள திரு. நெ. சிவஞானம் பிள்ளையவர்கள், பி. ஏ. எம். எல். சி. தலைவராகவும், திருச்சி பிஷப் ஈபர் (எஸ். பி ஜி) கல்லூரி ஆங்கில ஆசிரியர் எம். எஸ். பூர்ணலிங்கம்பிள்ளை பி. ஏ. எல். டி அமைச்சராகவும், அமைக்கப்பெற்று வேண்டியன செய்யப் பட்டு வருகின்றன. இப் பல்கலைக்கழகம் தமிழ்நாட்டிலுள்ள பார்ப்பார், பார்ப்பாரல்லாதார், துலுக்கர், கிறிஸ்தவர் முதலான பல வகுப்பினருடைய பிள்ளைகளுக்காகவும் நாட்டின் மேன்மை கருதியும் ஏற்பாடு செய்யப்படுவதால் அதற்கு அரசு முறையில் பலவிதப் பிரிவுகளுண்டாயிருப்பினும் அனைவரும் ஒருங்கே ஒத்துழைக்கக் கடமைப்பட்டவராவர். தமிழ்மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவரும் தமிழிற் பற்றுடையவரும், இந்தியா, பர்மா, இலங்கை, மோரீஸ், ஐரோப்பா, ஆபிரிக்கா, அமெரிக்கா, மடகாஸ்கர் என்ற பல கண்டங்களிலும் தீவுகளிலும் பகுதிகளிலும் பல காரணத்தை முன்னிட்டுப் போயிருப்பதால் அவர்களெல்லோரும் தங்கள் தங்களாலியன்ற மட்டும் இந்தப் பல்கலைக் கழகத்திற்குப் பொருளுதவி புரியுமாறு வேண்டப்படுகின்றனர். பல்கலைக்கழகத்திற்கு வேண்டிய தொகை ரூ. 20 லட்சம். துவக்கத்தில் தேவை ரூ. 3 லட்சம். நாட்டுக் கல்வி அபிமானமும் தாராள சிந்தையுமுடைய ஆங்காங்குள்ள நண்பர்கள் அமைச்சர்கள் அனுப்புந் தொகை தமிழரின் பல்கலைக்கழகப்பண்டென்று திருச்சிராப் பள்ளி இம்பீரியல் பாங்கில் போடப்படும். தலைவருடைய உத்தரவின்றி ஒரு பைசாவுஞ் செலவு செய்யப்படமாட்டாது. கமிட்டியில் அமைச்சர் இருப்பிடம் 76 ஆண்டார் வீதி, தெப்பக் குளம் தபாலாபீஸ், திருச்சிராப்பள்ளி (சென்னை மாகாணம், இந்தியா)

இவ்வாறு தமிழ்ப் பல்கலைக்கழகம் தொடங்குவதற்காக அமைக்கப்பெற்ற குழுவின் தலைவர் திரு. நெ. சிவஞானம் பிள்ளையவர்களும், அமைச்சர் எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளையவர்களும் கழகத்தோடு நெருங்கிய தொடர்பு உடையவர்கள். சிவஞானம் பிள்ளை அவர்கள் தொடக்கத்தில் கழகத்தில் 10 பங்குகள் எடுத்துக்கொண்டார்கள். பின் அமைச்சரானவுடன்

மேற்கொண்டு 40 பங்குகள் வாங்கினர். இன்று அவை நான்கு மடங்காகப் பெருகி அவர்தம் குடும்பத்தார் பெயரில் மாற்றப் பெற்றுள்ளது. அந்த அளவு கழக வளர்ச்சியில் ஈடுபாடு கொண்டவர்கள் திரு எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளையவர்களும் ஆவர். அவர் இயற்றிய சில நூல்களைக் கழகமே வெளியிட்டுள்ளது. இவ்வாறு கழகத்தோடு நெருங்கிய தொடர்புடைய இருவரும் தமிழ்ப் பல்கலைக்கழகம் அமைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இருப்பினும் போதிய பொருளுதவி கிடைக்காமையால் அத்திட்டம் நிறைவேறாது போயிற்று.

'செல்வியில்' இச் செய்திக் குறிப்பினைக் கண்ட வி. சங்கரலிங்கம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., யென்பார் இத்தகைய தமிழ்ப் பல்கலைக்கழகம் அமையும் வாய்ப்பையும் அவ்வாறு அமையின் அது செய்யவேண்டிய பணியையும், குறிப்பாகத் தமிழ்மொழி வளர்ச்சிக்குச் செய்ய வேண்டிய பணியையும்பற்றி விரிவாக எழுதியுள்ளார். இதுவும் அதே தொகுதியில் வெளியாகியுள்ளது.

## தமிழர் கலைக்கழகம்

(வி. சங்கரலிங்கம் பிள்ளை)

''தமிழ்நாட்டிற்குத் தனியே ஒரு கலைக்கழகம் அமைக்க வேண்டுமென்ற கருத்து சில நாட்களாகப் பல தமிழ் நன்மக்களது நினைவில் முற்பட்டு உலவுகின்றது. தெலுங்கு நாட்டிற்குத் தனியே ஒரு கலைக்கழகமும் மலையாள நாட்டிற்கு அப்படியே பிறிதொன்றும் அமைந்த பின்பு, கன்னடத்திற்கு மைசூர்க் கலைக் கழகம் அமைந்திருப்பதனாலே, சென்னையில் இப்போதுள்ள கழகத்தினையே தமிழ்க் கழகமாக ஏன் ஆக்கிக் கொள்ளுதல் கூடாது, என்ற கேள்வி ஒருபுறம் எழுகின்றது. இப்போதுள்ள சென்னைக் கலா சங்கத்தில் வடமொழியாளர் தம் மொழிக்கு வேண்டிய நன்மைகளை மிகுதியாகச் செய்து தமிழ் வளர்ச்சியைக் கருதாமலிருப்பது அங்ஙனம் ஆக்கிக்கொள்ள முடியாமைக்கு ஓர் காரணமாகுமா? இன்னொரு கலைக்கழகம் நிலைநாட்டுதற்குச் சென்னை சட்டசபையார் புதுச்சட்டம் ஒன்று ஏற்படுத்துதற்குப் பதிலாக இக் கலைக்கழகத்திற்கே தமிழ் வளர்ச்சிக்குத்தக்க திருத்தச்சட்டம் அமைத்தல் முடியாதா? அல்லது தமிழ்மக்களது கல்வி வளர்ச்சியைக் கருதுவதற்கு அவருள் ஒரு பகுதியாரே மிக்க அதிகாரம் செலுத்துதற்கிடமாயிருக்கின்ற சென்னைக் கலைக் கழகம் பயன்படாதோ? சட்டசபையில் அவ்வொரு பகுதியாரை யொழித்த பெரும்பகுதியாரது பிரதிநிதிகளின் எண்ணம் பாதிக்கு

மேற்பட்டிருக்கும்படி செய்திருப்பது போலக் கலைக்கழகப் பெருஞ் சபை (Sanate)யிலும் அதன் அதிகாரமிக்க உட்கழகத்திலும் (Syndicate) அப் பகுதியாரல்லாதாரது ஆட்சி நிலைக்கும்படி இடங்களைச் சேமஞ் (Reservation) செய்து வைத்தல் கூடாத தொன்ரு? அல்லது புதிதாக ஏற்படும் தனிக்கலைக் கழகத்திற்கும் இந் நோக்கங்களைச் செம்மையாக நிறைவேற்ற முடியுமா? இப்பொழுது ஏற்படும் கலைக்கழகம் மொழிவளர்ச்சிக்கு மாத்திரமா, தமிழருட் பெரும்பான்மையோர் கல்வி வளர்ச்சிக்கும் பயன்படுவதற்கா ? இவ் வினக்களுக்கு விடைகளைப் புதுக்கலைக்கழகக் கமிட்டியார் ஆராய்ந்து முடிவு செய்தல் விரும்பற்பாலதாகும்.

சென்னையில் ஒரு கலைக்கழகமிருந்தாலும் திருச்சியிலும் பிறிதொன்று இருத்தல் வேண்டுமென்ற ஒரே கொள்கையையே முக்கிய நோக்கமாக அவர்கள் கொள்ளின், அது தமிழர் கலைக் கழகம் என்பதை நிலைநிறுத்தப் பயன்படுமோ என்ற ஐயம் நிகழ்கின்றது. இப்பொழுதுள்ள ஆங்கிலக் கலாசாலைகளின் தலைவர்கள் சென்னைக் கலைக்கழகத்தைத் தமிழ்மொழியளவில் எப்படி நடத்துகின்ருர்களோ அவ்வாறேதான் புதிதாக வரும் கலைக்கழகத்தை நடத்துதற்குரிய சூழ்ச்சிகளைக் கூறுவார்களாயின், அவைகள் தமிழ்வளர்ச்சிக்கும் தமிழ்மக்களுட் பெரும்பான்மையோர் அறிவு வளர்ச்சிக்கும், தக்கனவாக இருத்தல் அரிது. தமிழிலே ஆங்கில நுண்ணூல்களை மொழிபெயர்க்கவும், வடமொழியிலும் பிறமொழியிலுமுள்ள அரிய நூல்களை மொழிபெயர்க்கவும், தமிழ்நாட்டில் பல இடங்களிலுமுள்ள பல்வகைக் கலைத்துறைகளுக்குரிய ஏடுகளியாவற்றையுஞ் சேர்த்து அவற்றை ஒத்துப்பார்த்து அச்சியற்றவும் தமிழிலே புதுக்கதை (Novel) களாகப் பிழையோடு எழுதப்படுகின்ற புத்தகங்களைத் திருத்தஞ் செய்யவும், பிழைமிக்கனவற்றைக் கண்டித்து ஒதுக்கவும், தமிழில் இலக்கணம், சங்கநூல், நீதிநூல், பெருங்காப்பியங்கள், சிறுகாப்பியங்கள், சமய நூல், சோதிட நூல், மருத்துவ நூல், யோக நூல், இசை நூல், கணக்கு நூல், ஓவியம், சிற்பம் முதலியவற்றைத் தனித்தனி செம்மையாக ஆராய்ச்சி செய்யவும், ஆங்கிலத்திலேயுள்ளபடி பலவகைப் பேரகராதிகள் அமைக்கவும் வேண்டிய நிலையங்கள் ஏற்படுகின்றவரை தமிழ்வளர்ச்சி செம்மையாக நடைபெற முடியாது. தமிழ்மொழியைத் தலைமையாகவும், பிற மொழிகளைத் துணைகளாகவும் புதுக்கலைக்கழகத்தில் ஏற்படுத்தாமல் சென்னைக் கலைக்கழகத்திலுள்ளபடி வடமொழிக்கே ஏழு, எட்டு, சிரோமணிப்பட்டங்களையும் வித்துவான் பட்டங்களையும் ஆராய்ச்சிப் பட்டங்களையும் பெருக்கிவிடப்படுமானல் தமிழ் வளர்ச்சிக்கு வேண்டிய பணம் இல்லாமற்போகும்.

தமிழ்மக்களது செல்வமும் அவர்கள் தாய்மொழியைப் போற்று தற்குப் பயன்படாதொழியும்.

இனி, தொழில் கல்விகளைச் செம்மையாகத் தழைத்தோங் கும்படி செய்வதற்குரிய முயற்சிகள் புதுக்கலைக்கழகம் அமைப் போரால் கவனிக்கப்படுவதற்குரியன. தமிழ்மக்களுட் பெரும் பான்மையோர் நன்கு கற்றுத் தேர்ந்து ஊதியம் பெறுவதற்குப் பயன்படாமல் இப் புதுக்கலைக்கழகம் ஏற்படுமானால் தமிழ்ச் செல்வர்களது பணம் வீணே வாரி இறைத்ததாக முடியும். தமிழருள் கற்ற ஒரு பகுதியாரைத் தவிர ஏனைப் பெரும்பான்மை யோர்களுள் போதகாசிரியர்கள் வேண்டிய அளவிருக்கின்றார் களோ என்பது முக்கியமாகக் கவனிக்கத்தக்கது. அரசாங்கத்தில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் ஏற்பட்டிருத்தல்போல இதிலும் ஏற்படாமற் போனால் தமிழ் தமிழெனச் சொல்லிக்கொண்டு தமிழர் பெரும்பணத்தைச் சூழ்ச்சிமிக்க ஒருவகையார் தமக்கே பயன்படுத்துதல் கூடும். ஆதலால் இங்குக் கூறிய எல்லாவற் றையும் உற்றுநோக்கித் தமிழரிற் பெரும்பான்மையோர்க்குத் தெளிவான நிலைத்த பயன் ஏற்படும்படி இக் கலைக்கழகத்தை நிலைநிறுத்த முன்வரும் யாவரும் தக்க முயற்சி செய்தல் வேண்டும்.''

இவ்வாறு பொதுவாகத் தமிழுக்கெனத் தனிப் பல்கலைக்கழகம் அமைய வேண்டியதன் இன்றியமையாமையினைத் தமிழர்கள் அன்றே உணர்ந்தனர். இம் முயற்சியில் தனிப்பட்ட முறையில் ஆர்வம் காட்டிய செட்டிநாட்டரசர் அண்ணாமலை செட்டியார் அவர்கள் தாம் சிதம்பரத்தில் நடத்திவந்த மீனாட்சி தமிழ்க் கல்லூரியையே தமிழ்ப்பல்கலைக் கழகமாக உயர்த்த எண்ணினார். ஆனால் அது முடிவில் பொதுவான முறையில் அண்ணாமலைப் பல்கலைக் கழகமாக உருவாகியது.

இங்ஙனம் தமிழ்த் தலைவர்கள் கண்ட கனவு அரை நூற் றாண்டுக் காலத்திற்குப்பின் இன்று தமிழக முதல்வர் அவர்கள் பெருமுயற்சியால் தஞ்சையிலே 'தமிழ்ப் பல்கலைக்கழகம்' உருவாகி யிருப்பது கண்டு மகிழ்ந்து வரவேற்கிறோம்.

---

### வலவன் யார்?

*" பாட்டும் உரையும் பதவிதரு கற்சான்றும்*
*காட்டும் படங்கடிதங் கையெழுத்தும்—கூட்டிப்*
*புலவர் வரலாற்றைப் போற்றுங் கலையில்*
*வலவன்யார் சுப்பையாவல் லால் "*

—மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்.

# ‘அந்தோ’

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

‘அந்தோ’ என்னும் சொல் ‘ஐயோ’ என்னும் பொருளது. தொல்காப்பியத்தில் அந்தோ என்பது ‘அந் தீற்று ஓ’ என வழங்கப் பெறுகிறது. அந்தோ என்பது பழந்தமிழ் இலக்கியங்கள் முதல், இக்கால இயல் வழக்குவரை இயன்று வருகின்றது.

உணர்வு வெளிப்பாட்டில் வெளிப்படும் சொற்களுள் ஒன்று அந்தோ ஆகும்.

“அந்தோ அளியேன் வந்தனென் மன்ற” (புறம். 238)

“அந்தோ எந்தை அடையாப் பேரில்” (புறம். 261)

“அந்தோ தானே அளியள் தாயே
நொந்தழி அவலமொ டென்னு குவள்கொல்” (நற். 324)

“உயங்கி னளென் றுகாதிர்மற் றந்தோ
மயங்கி னளென்று மருள்இர் கலங்கன்மின்” (கலித். 143)

என்பவையெல்லாம் உணர்வு தட்டி யெழுப்பிய உருக்கத்தில் வெளிப்பட்டவை என்பது வெளிப்படை.

அந்தோ என்னும் இவ்வுணர்வு வெளிப்பாட்டுச் சொல், ஏனை உணர்வு வெளிப்பாட்டுச் சொற்களொடு ஒப்பு நோக்கத் தக்கதாம்.

அம்மை, அன்னை, ஆத்தாள், அப்பன், அச்சன், அத்தன், ஐயன், அக்கை, அண்ணன் என்பனவெல்லாம் முறைப் பெயர்கள். இவையெல்லாம் அம்மா, அண்ணா, ஆத்தா, அப்பா, அச்சா, அத்தா, ஐயா, அக்கா, அண்ணா என விளிவடிவில் அமைய வும் பெற்றன. அன்றியும் பல்வேறு உணர்வு வெளிப்பாட்டுச் சொற்களாகவும் இயல்கின்றன.

அம்மை—அம்ம, அம்மா, அம்மே, அம்மோ,
அம்மம்ம, அம்மம்மா, அம்மம்மே, அம்மம்மோ,
அம்மனாய், அம்மனே, அம்மனோ, அம்மையே,
அம்மவோ, அம்மாடியோ

அன்னை—அன்ன, அன்னய், அன்னே, அன்னோ,
அன்னையே, அன்னையோ, அன்னன்ன, அன்னன்னே,
அன்னன்னோ

ஆத்தாள்—ஆத்தா, ஆத்தே, ஆத்தோ, ஆத்தாடி,
ஆத்தாடியே, ஆத்தாடியோ, ஆத்தா ஆத்தா,
ஆத்தத்தா, ஆத்தத்தே ஆத்தத்தோ, ஆத்தாளோ

அப்பன்—அப்ப, அப்பா, அப்பே, அப்போ, அப்பப்ப,
அப்பப்பா, அப்பப்பே, அப்பப்போ, அப்பாடியோ

அச்சன்—அச்சா, அச்சோ, அச்சச்சா, அச்சச்சே,
அச்சச்சோ, அச்சாவோ

அத்தன்—அத்தா, அத்தோ, அத்தத்தா, அத்தத்தோ,
அத்தாவோ

ஐயன்—ஐய, ஐயா, ஐயே, ஐயோ, ஐயகோ, ஐயவோ,
ஐயாவோ,
ஐயோ ஐயோ, ஐயையா, ஐயையே, ஐயையோ,
ஐயாடியோ

அக்கை—அக்கா, அக்கோ, அக்கக்கா, அக்கக்கோ,
அக்கைச்சி,
அக்கடா, அக்கடே, அக்காடி, அக்கடோ

அண்ணன்—அண்ண, அண்ணு, அண்ணே, அண்ணோ,
அண்ணுவோ, அண்ணுத்தே, அண்ணுல்

இன்னவை பிறவுமாம். இச் சொற்கள் எல்லாமும் உயிர் முதல் எழுத்தால் இயன்றவை என்பது நோக்கத்தக்கது. இச் சொற்களைப் போலவே உணர்வு வெளிப்பாட்டுச் சொல்லாக இருப்பது 'அந்தோ' என்பது. ஆயின் அஃதொரு முறைப் பெயராக வழக்கில் இல்லை. ஆனால், அது முறைப் பெயர் வழிப் பட்டதாகவே இருக்க வேண்டும் என உறுதி செய்யலாம். அம் முறைப் பெயர் 'அந்தை' என்பதாம். அந்தை என்னும் முறைப் பெயரழிவால் அதன் வழிப்பட்ட உணர்வுச் சொற்கள் கிளைத்தில வாம்.

அந்தை என்பதை நிறையெனவும் (தொல். தொகை. 28. நச்) ஒரு 'காலணி' எனவும் (மதுரைத் தமிழ்ச்சங்க அகராதி) கண்ட அறிஞர் உலகம் அந்தையை ஒரு முறைப் பெயராகக் காணவில்லை.

'அந்தீற்று ஓ'-(அந்தோ) 'அன்னீற்று ஓ' (அன்னோ) என்பவற்றை இடையியலில் தொல்காப்பியர் கூறுகிறார். அன் என்பது 'அன்னை' என்னும் முறைப் பெயரடியாகத் தோன்றியது போல, அந்தென்பது 'அந்தை' என்னும் முறைப் பெயரடியாகத் தோன்றியிருக்க வேண்டும் எனக் குறிப்பாக அறியலாம். அந்தை முறைப் பெயர், தந்தையாய் (தம்+அந்தை) விளங்குவது தகும் என்பதை மற்றை முறைப் பெயர்கள் தெளிவிக்கின்றன.

முறைப்பெயர்கள் 'தம்' என்னும் உரிமைப் பொருட்சொல் தொடர வெளிப்படையாகவும், ஒரு சார் குறிப்பாகவும் அமைந்துள.

ஆய் (தம்+ஆய்) தாய்
அப்பன் (தம்+அப்பன்) தமப்பன் (தகப்பன்)
ஐயன் (தம்+ஐயன்) தமையன்
அக்கை (தம்+அக்கை) தமக்கை
அங்கை (தம்+அங்கை) தங்கை

இவற்றைப் போலவே தம்முன், தம்பின் (தம்பி) என்பனவற்றையும் காண்க. இவ் வுரிமைப் பொருள் இணைப்பொடு,

அந்தை (தம்+அந்தை) தந்தை

என்றமைதலைக் காண்க. அந்துவன் செள்ளை, அந்துவன் வேண்மாள், நல்லந்துவன், அந்துவஞ் சேரல் என்னும் பண்டைப் பெயர்களையும் எண்ணுக.

அந்தை என்னும் பெயருடன் 'தம்' என்னும் உரிமை ஒட்டு ஒட்டியதால் தந்தை அமைந்தது எனக் கொண்டால், பண்டைப் பெருமக்கள் சிலரின் பெயர்ப்புணர்ப்புச் சிக்கல் அவிழ்க்கப் பெறுதல் கண்கூடாம்.

சாத்தந்தை, கொற்றந்தை, கீரந்தை, எயினந்தை, ஆந்தை, பூந்தை என்னும் பெயர்கள் முறையே சாத்தன் தந்தை 'சாத்தந்தை' கொற்றன் தந்தை 'கொற்றந்தை' என்பன போல மருவியதாகக் கூறுதல் ஒழிந்து, சாத்தன் அந்தை 'சாத்தந்தை' கொற்றன் அந்தை 'கொற்றந்தை' என்பன போலப் புணர்ப்புற்றதாகக் கூறத் தகும். முன்னதன் புணர்ச்சி முறையிற் பின்னதன் புணர்ப்பு இயல்பும் எளிதுமாதல் விளங்கும்.

அறிஞர்கள் ஆய்வார்களாக. இவ் வாய்வு, மேலும் சில ஆய்வுக்கு ஏந்தாக அமையும் என்பதை உணர்வார்களாக!

———

# சங்க இலக்கியத்தில் 'பல்லி'

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

சங்க இலக்கியத்தில் பல்லியைப்பற்றிச் சில பாடல்கள் கூறுகின்றன.

"எய்ம்முள் அன்ன பரூஉமயிர் எருத்தின்
செய்ய்ம்ம் மேவல் சிறுகட் பன்றி
ஓங்குமலை வியன்புனம் படீஇயர் வீங்குபொறி
நூழை நுழையும் பொழுதின் தாழாது
பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென
மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்துதன்" —நற்றிணை-98

"முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்
வருவம் என்னும் பருவரல் தீரப்
படுங்கொல் வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி
பரல்தலை போகிய சிரல்தலைக் கள்ளி" —நற்றிணை-169

"இடூஉ ஊங்கண் இனிய படூஉம்
நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கின் தேற்றும்
மனைமர நொச்சி மீமிசை மாச்சினை
வினைமாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்"
—நற்றிணை-246

"துனைபரி துரக்குஞ் துஞ்சாச் செலவின்
எம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மாண்
ஓங்கிய நல்லில் ஒருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவி" —அகம்-9

"முதைச்சுவல் கலித்த மூரிச் செந்தினை
ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்
பகுவாய்ப் பல்லிப் பாடோர்த்துக் குறுகும்
புருவைப் பன்றி வருதிறம் நோக்கி" —அகம்-88

"மையல் கொண்ட மதனழி யிருக்கையள்
பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்ல கூறென நடுங்கிப்
புல்லென் மாலையொடு பொருங்கொ ளுனே" —அகம்-286

"உள்ளுதொறு படூஉம் பல்லி
புன்னுத்தொழு துறைவி செவிமுத லானே" —அகம்-35

"கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய
சிறுவெண் பல்லி போலத் தன்னொடு" —புறம்-256

"இனைநல முடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன" —கலித்தொகை-11

"உள்ளார் கொல்லோ தோழி கள்வர்தம்
பொன்புனை பகழி செப்பங் கொண்மார்
உகிர்நுதி புரட்டு மோசை போலச்
செங்காற் பல்லி தன்றுணை பயிரும்
அங்காற் கள்ளியங் காடிறந் தோரே" —குறுந்தொகை-16

"பொருந்தலாற் பல்லி போன்றும்" —சீவக சிந்தாமணி-1895

காட்டுப்பன்றியைப் பிடிக்க இயந்திரம் வைத்த புழை வழியாகப் பன்றி புகும்போது தாழாது விரைந்து நல்ல பக்கத்திலிருந்து பல்லி அடித்தது. அதைக் கேட்ட காட்டுப்பன்றி மெல்ல மெல்லப் பின்வாங்கியதாகக் கூறப்பட்டுள்ளது. காட்டுப்பன்றி இரவில் விளைச்சலை மேய்வது இயற்கையான செய்தியாகும். இன்றும் கிழங்கு, பயறுவகைப் பயிர்களைத் தின்னுதிருப்பதற்காகக் காட்டுப்பன்றி நுழையும் இடத்தில் அதைப் பிடிக்க வலைகள் வைப்பதுண்டு. வெளியூர் சென்ற தலைவனின் நல்வரவைச் சிறிய குடிகளையுடைய பாக்கத்தில் நெடிய சுவரின்கண்ணிருந்த பல்லி அறிகுறியாக அடித்து அடித்துத் தலைவிக்குத் தெரிவித்ததாகக் கூறப்பட்டுள்ளது. பல்லி படுதல் என்கிற சங்க வழக்கு, பல்லி அடித்தல் என்ற பொருளில் வந்துள்ளது. கைந்நிலை 18ஆம் பாட்டிலும் "வாய் மாண்ட பல்லி படும்" என்று கூறுவதையும் காணலாம். உயர்ந்த இடத்தில் கட்டிய பெரிய வீட்டில் நள்ளிரவில் தலைவி தன்னுடைய தலைவனைப்பற்றி நினைக்கும்போது பல்லி அடித்ததைக் கேட்டு அதனை நல்ல சகுனமாகக் கொண்டாள் என்று கூறியிருப்பதைக் கவனிக்கலாம். தேற்றும் என்கிற வழக்கு பல்லி அடித்துத் தெளிவாக்கும் என்ற வழக்கில் வந்துள்ளது. வினை முற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகனிடம் தனது பெரிய வீட்டில் பல்லி படுந்தோறும் பரவித் தலைவி காத்திருப்பாள், விரைவில் செல்லவேண்டும் என்று சொல்வதும் கவனிக்கத்தக்கது. தினையைத் தின்பதற்கு வரும் காட்டுப்பன்றி தன் பக்கத்தில் பல்லி படுதலை, பல்லி அடிக்கும் ஓசையைக் கேட்டு நெருங்கும் என்று கூறப்பட்டுள்ளது. 'பல்லிபாடு' (அகம். 88) பல்லி செய்யும் ஓசையைக் குறித்ததாகும். தலைவனைப் பிரிந்த

தலைவி பல்லிபடுதொறும் தொழுது நல்லது கூறுமாறு ஒடுங்கி மாலைக்காலத்தே கூறுவதைப்பற்றிச் சொல்லப்பட்டுள்ளது. அகநானூறு 351ஆம் பாடலில் 'பல்லி புள்ளுத்தொழும்' அஃதாவது பல்லி சகுனம் பார்க்கும் தன் தலைவியை நினைத்துத் தலைவன் வருவதாகக் கூறப்பட்டுள்ளது.

புறநானூறு 256-ம் பாடலில் மட்கலம் செய்யும் அச்சுடைய சக்கரத்தில் பொருந்திய சிறு வெண்பல்லி என்று கூறப்பட்டிருப்பதைக் காணலாம். 'பொருந்தலாற் பல்லி போன்றும்' என்று சீவக சிந்தாமணி 1895ஆம் பாட்டில் கூறப்பட்டுள்ளது. பல்லியின் அரிய தன்மை சுவரிலோ வேறு எந்தப் பொருளிலோ கால்களால் பற்றிக்கொண்டு இருப்பதாகும். வழவழப்பான கண்ணாடியில்கூடத் தலைகீழாகப் பொருந்தியிருக்கும். அதில் நடக்கும் ஆற்றலும் பல்லிக்கு உண்டு. அதனால் சீவக சிந்தாமணி 'பொருந்தலாற் பல்லி போன்றும்' என்று கூறியது. அச்சுடைய சக்கரத்தில் பொருந்தியிருந்த சிறு பல்லி அந்தச் சக்கரத்தைச் சுழற்றி மட்பாண்டம் செய்யும்போதுகூட அந்தச் சக்கரத்தில் பொருந்தி, விடாமல் பற்றியிருக்கும் என்று கூறியது அரிய உண்மையான செய்தியாகும். பல்லி எப்படிப் பொருந்துகின்றது என்பதை அறிவியலார் விளக்கியுள்ளனர். பல்லி தனது காலடியைச் சுவரில் வைத்தவுடன் தனது கால் விரல்களுக்கும் சுவருக்கும் இடையில் உள்ள காற்றை உறிஞ்சி வெளியேற்றி விடுகின்றது. ஆதலின் வெளிக்காற்றின் அழுத்தத்தால் (Atmospheric Pressure) பல்லியின் காலடிகள் ஒட்டிக்கொள்கின்றன. அதனால் பல்லி கீழே விழுவதில்லை. பல்லிகள் மேற்கூரையில் தலைகீழாக நடந்தாலும் எளிதில் விழுவதில்லை. வலிதாகப் பற்றிக்கொள்வதால் 'பொருந்தலாற் பல்லி போன்றும்' என்று சீவக சிந்தாமணி கூறியது. 'பொருந்தல்' என்ற சொல் வழக்கின் முழுப் பொருளையும் உணர அறிவியலறிவும் வேண்டியுள்ளதைக் காணலாம்.

பல்லி சூழ்நிலைக்கேற்ப உடல் நிறத்தையோ உறுப்புகளின் நிறத்தையோ மாற்றிக்கொள்ளும். செங்காற்பல்லி (Golden Geeko) பாடலில் கூறப்பட்டுள்ளது. திருப்பதியில் காணப்பட்ட ஒருவகைப் பல்லியின் உடல் முழுவதும் சிவந்தநிறமாகக் காணப்பட்டதைக் கண்டு (Frank Finn) என்ற அறிவியல் அறிஞர் குறிப்பிட்டு எழுதியுள்ளார். புறநானூறு வெண்சிறு பல்லியையும் குறிப்பிட்டுள்ளது. வீட்டுப் பல்லி வீட்டின் சுவர் நிறத்தையும் கள்ளி முள்ளரையில் இருந்த பல்லி அதன் நிறத்தைப் போலவும் காணப்படுவது இயற்கையாகும். இதுபோன்று, வீட்டுச் சுவர் வெள்ளையாக இருந்தால் வெண்மையாகவும், வெள்ளையடிக்காது

இருந்தால் சாம்பல் நிறம் அல்லது சிறிது கருப்பான நிறமாகவும் பல்லிகள் காணப்படுவதுண்டு. இதை Varied House Geeko என்று அழைப்பர். நல்ல பாம்புகள்கூட அவ்வாறு சூழ்நிலைக் கேற்ப நிறம் மாறிக் காணப்படுவதை நான் மாகியில் பார்த்தேன். குறவர்கள் 'நாட்டு மூர்க்கன், மரமேறி மூர்க்கன்' என்று இருவகை நல்ல பாம்புகளைக் கொண்டுவந்தனர். இந்த நல்ல பாம்புகள் இரண்டு வகைகள் என்று குறவர்கள் கூறினாலும் அது தவறு என்று புரிந்துகொண்டேன். பல்லியும் ஓரளவு சூழ்நிலைக் கேற்ப நிறத்தை மாற்றவல்லது. ஆனால் பச்சோந்தியைப் போல உடனுக்குடனே சூழ்நிலைக்கேற்ப நிறத்தைப் பல்லி மாற்ற முடியாது.

பல்லி ஓசையிடும்போது வாயைத் திறந்துதான் ஓசையிடும். அதைத்தான் 'பகுவாய்ப் பல்லி' என்று கூறியுள்ளனர். மற்றும் காட்டுப்பன்றி இந்த ஓசையைக் கேட்டு நெருங்கும் என்று கூறி யிருப்பதைக் கவனிக்க வேண்டும். காட்டுப்பன்றி இரவில் ஓசையைக் கேட்டால் ஐயப்படக்கூடியது. இந்த இயற்கையான செய்தியைக் கற்பனையாகக் காட்டுப்பன்றியும் சகுனம் பார்த்த தாக சங்கப் புலவர்கள் பாடினர். ஆனால் சங்க காலத்தில் 'மனிதன் பல்லி சகுனம் பார்த்தான்' என்பது மிக முக்கியமான செய்தியாகும். பல்லி எந்தப் பாங்கர் அஃதாவது எந்தப் பக்கம் ஒலித்தது. நல்ல பக்கமா, கெட்ட பக்கமா என்று பார்த்திருக் கிறார்கள். அகநானூறு பாடலில் (88) "பாங்கர்ப் பாடோர்த்துக் குறுகும் புருவைப் பன்றி" என்று கூறியிருப்பதைக் காணலாம். நல்ல பக்கத்தில் பல்லியின் பாடு ஓர்த்துத் தினையை உண்ணப் பன்றி நெருங்கினதாகக் கூறப்பட்டுள்ளது. பாடு என்ற சொல் ஓசை என்ற பொருளில் வந்துள்ளதைக் காணலாம். இதே பொருளில் "பாடு நடை வழலை" என்று ஓசையிட்டு ஒலியைப் பிடிக்கும் இரத்தக் கட்டுவிரியன் பாம்பைப்பற்றி நற்றிணையில் கூறியுள்ளதைக் காணலாம். இந்தப் பாம்பு ஓசையிட்டுப் பக்க வாட்டமாக வளைந்து வளைந்து செல்லும். அதனால் திருநெல் வேலி மக்கள் புடையன் பூச்சி என்றழைத்தனர். ஆங்கிலத்திலும் Side Winder என்று அழைத்தனர். அவ்வாறுகச் செல்லும் தடத்தில் மாறுமாறுகப் போகும் அணுசக்தி வெடி Side Winder missile என்று அமெரிக்காவில் அழைக்கப்படுகின்றது.

பாங்கர் என்ற சொல் பக்கம் என்ற பொருளில் வந்துள்ளது. சங்க நூல்களில் தலைவன் பக்கத்திலேயே இருப்பவன் பாங்கன் என்று கூறப்பட்டிருப்பதைக் காணலாம். பல்லி அடித்ததும், பல்லியைத் தொழுது நல்ல பக்கம் அடித்தால் நல்லது வினையும்,

தலைவன் திரும்புவான் என்று தலைவி கருதினதாகக் கூறினதைக் காண வேண்டும். இப்போது வழங்கும் பல்லி சாத்திரம் என்ற பிற்காலத்திய நூல்கள் வடமொழிச் சொற்கள் பல கலந்து பெரிய எழுத்துக் கோவலன் கதையைப் போல தெருவில் விற்கப்படுகின்றன. ஆனால் அவற்றுக்கு அடிப்படையானது பல்லி ஓசையைப் பாங்கொத்ததைக் கேட்டுச் சங்க காலத்துத் தமிழர் சகுனம் பார்த்தமையான அடிப்படையில் எழுந்ததாகும்.

அகநானூறு 351ஆம் பாட்டு "உள்ளுதொறு படூஉம் பல்லி புள்ளுத்தொழு துறைவி" என்று கூறியுள்ளது. புள் என்பது சகுனத்தைக் குறித்தது. புள் என்பது பறவையின் சங்ககாலப் பெயருமாகும். சில பறவைகள் வலம் வருவது, இடம் வருவதைக் கண்டு நல்ல சகுனம், கெட்ட சகுனத்தைக் கண்டனர். பின்னர் புள் என்ற பெயர் புள் வழியாக இல்லாமல் பல்லி சொல்லும் வழியாகக் கண்டுபிடித்த சகுனத்தையும் குறித்தது. இவ்வாறுதான் சகுனத்தைக் குறித்த மிகப் பிற்காலத்திய பட்சி சாத்திரம், பல்லி சாத்திரம் முதலிய நூல்கள் எழுந்தன. ஆனால் இக்காலத்திய இந்த சாத்திரங்களில் வடநூல் பெயர்கள் இருந்தாலும் அடிப்படை சங்ககால நம்பிக்கைகள்தாம் என்பதை உணரவேண்டும்.

'நம் வரவினுலே கணி எய்தியிருக்கும்' என்ற பழைய உரை விளக்கம் கூர்மையாகக் கவனிக்கத்தக்கது. 'கணி' என்ற சொல் காண்பது, காணி என்பதன் சுருக்கமாகும். வானத்தில் கண்ட மீன்களைக் கண்டு காலத்தை, பருவத்தைக் கணிப்பது ஒரு சாத்திரம். இவ்வாறு கணித்தவர்தாம் கணியன் பூங்குன்றனுர். அதுபோன்றேதான் குறிஞ்சிப்பூ பூக்கும் காலத்தை வைத்துக் கொண்டு கணித்தவர் கணியராவார். இன்றும் கேரளநாட்டில் 'கணியர்' என்ற பழங்குடி மக்கள் வானத்தில் காணப்படும் உடுக்களைக் கண்டு நல்லகாலம், கெட்டகாலம் சொல்லுகின்றனர். இன்று புதுவை மீனவர் கரையோரத்தில் உள்ள உயர்ந்த மரத்தையோ, கோயில் கட்டிடத்தையோ, காணியாகக் கொண்டு மீன்பிடித்துத் திரும்பும்போது கரைசேர்கிருர்கள். இரவில் விண்மீன்கள் காணியாகவும் பகலில் மரங்கள் முதலியவை காணியாகவும் பயன்படுகின்றன. சங்ககாலத்தில் திருச்செந்தூர்க் கடற்கரைக் கோயில் காணியாகப் பயன்பட்டிருக்கலாம். 'செட்டியாருக்குத் திருச்செந்தூரான் துணை' என்ற ஒரு வழக்கு தமிழிலும், மலையாளத்திலும் இன்றும் வழங்குகின்றது. இப்பொழுது காணி என்று வழங்குவதே சங்ககாலத்தில் கணி என்று வழங்கியுள்ளது.

பல்லி பேசினதிலிருந்து நல்லசகுனமும், கெட்டசகுனமும் கண்டுபிடித்தது மிக முக்கியமானதாகும். சங்ககாலத்திற்கு முன்னரே புள் அஃதாவது பறவை பறக்கும் வழியாகக் கண்டுபிடித்ததையே சங்க இலக்கியம் கூறுகின்றது. சங்ககாலத்திலேயே சகுனம் பார்த்தது 'சொகினனுர்' என்ற பெயர்கொண்ட புலவர் பெயரிலிருந்து புரிகின்றது. வீட்டுப்பல்லியை (Common House-Geeko) என்று அழைப்பர். அறிவியலில் Hemidactylus Gleadovin, Maculatus என்று அழைப்பர்.

கருவி நூல்கள் :

1. Mammalian of India—Frank Finn—Thacker spink and Co., Calcutta.
2. நற்றிணை
3. அகநானூறு
4. புறநானூறு
5. கலித்தொகை
6. சீவக சிந்தாமணி
7. கைந்நிலை.

———

## முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களின் 87 ஆம் பிறந்தநாள் விழா

புரசை, சுந்தரர் தமிழ்க் கல்லூரித் தலைவரும், இலக்கணத் தாத்தா எனப் போற்றப்பெறுபவருமான முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை அவர்களின் 87 ஆம் பிறந்தநாள் விழா 31—8—82 செவ்வாய்க்கிழமை மாலை, புரசை கெங்காதரேசுவரர் கோயில் தெருவிலுள்ள மாநகராட்சி உயர்நிலைப் பள்ளியில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. பேராசிரியர் அ. கி. பரந்தாமனுர், எம்.ஏ., அவர்கள் விழாவிற்குத் தலைமை ஏற்ருர். புலவர் ஆ. பா. வீரராகவன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினுர். பேராசிரியர் இராம. சுப்பிரமணியம், எம். ஏ., அவர்கள் பாராட்டுரை வழங்கினுர். மற்றும் புலவர்கள் இரா. இருட்டிணன், பேராசிரியர் நக்கீரர் ஆகியோர் உரையாற்றினர். வித்துவான் ப. கோவிந்தசாமி அவர்கள் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது. முதுபெரும் புலவர் மே. வீ. வே. அவர்கள் மேலும் பல்லாண்டுகள் நலமுடன் வாழ வாழ்த்துகிறோம்.

# பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து

[க. சி. கமலையா]

(சிலம்பு ௫௬, ௫௯௮-ஆம் பக்கத் தொடர்ச்சி)

எட்டாவது சிந்து ''கலவிவேட்ட தலைமகனுக்குத் தலைவி செவ்வியருமை கூறி வரைவு கடாதல்'' என்ற தலைப்பில் அமைகிறது. முன்னிரண்டு சிந்துப் பாடல்களைப் போன்று இச் சிந்தும் விளியுடன் தொடங்குகின்றது. ஒன்றுடன் நின்றுவிடவில்லை. அடுத்தடுத்து மூன்று விளிகள் குவிகின்றன.

தேனிரைந்திசை பாடு வண்டினம்
சேர்கடம்பணி தோளா—அன்பர்
சிந்தைமேவிய தாளா—வள்ளி
தெய்வயானை மணாளா—உம்பர்
சேனையாள்சிவ ஞானமாபுரி
திகழுந்தின தயாளா

கடப்பமாலையிலுள்ள தேனை வண்டினம் இரைந்து இசை பாடி மொய்க்கின்றன. அத்தகைய கடம்பணி தோளனைக் குமர குருபரர், 'கொன்பூத்த தெரியல் கடம்பணி தடம்புயக் குரிசில்' என்று போற்றுவார். முருகப் பெருமான் விரிந்து பரந்த மார்பையும் தோள்களையும் அணி செய்யும் மலரலங்கலின் சிறப்புத் தான் என்னே !

''இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து
உருள்பூந் தண்டார் புரளும் மார்பினன்''

என்று திருமுருகாற்றுப்படை பாடும்.

''ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு
வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்''

என்று மேலும் பாடுகிறார் நக்கீரர்.

''பதக்கம் தங்கின அழகையும் பெருமையையும் உடைய மார்பிடத்துச் சிவந்த மூன்று வரியாகிய உத்தம இலக்கணத்தை

யும் தன்னோடெதிர்த்தார்கள் வலியையும் உடைய, ஒளிவிட்டு, வளவிய புகழ் நிறையப்பட்டு, திரண்டு வளைய வேண்டுமிடம் வளைந்தும் நிமிர வேண்டுமிடம் நிமிர்ந்தும், உயர்ந்த தோள்கள் —பகைவரைப் பிளந்து அவருயிரை வாங்கும் உயர்ந்த தோள்கள் என்றுமாம்''* என்பது முற்கூறிய வரிகளுக்கு உரையாசிரியரின் உரையாகும்.

முருகன் எவ்வாறு தோற்றமளிக்கிறான்? முருகு தீட்டும் சொல்லோவியம் கேட்போம்; நெஞ்சிற் பதிப்போம்.

''செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியன் நெடியன் தொடியணி தோளன்.''

சிவந்த திருமேனியுடையவன் என்று தொடங்கி வளையணிந்த தோளையுடையவன் அழகன் முருகன் என்று திருமுருகு இயம்புகின்றது.

மதுரையில் கோயில் கொண்டெழுந்தருளும் சொக்கரின் தோள்களை அழகு செய்பவை எவை? தீந்தமிழில் குமரகுருபரர் பாடுகிறார்:

திருசுவை அமுதெழ மதுரமதொழுகு
பசுந்தமிழ் மாலை விரம்பப் புனைந்தன,
தமிழ் மதுரையிலொரு குமரியை மருவு
சௌந்தர மாறர் தடம் பொற் புயங்களே.

இளமுருகனுக்கும் அது பொருந்தும். அவனுடைய தடந்தோளையும் திருத்தாளையும் சொன்மாலை புனைந்து பாண்டித்துரைத்தேவர் பாடுகிறார்.

நான்கு விளிகளில் தலைவனாகிய சிவஞானபுரம் மேவிய முருகனை அழைப்பதேன்? தலைவிக்கு மன உளைச்சல், ''கடம்பணி தோளா! அன்பர் சிந்தை மேவிய தாளா! வள்ளி தெய்வயானை மணாளா! தீனதயாளா!'' என்ற விளிகளில் தனக்குற்ற கவலையைத் தலைவி உரைக்கிறாள்.

---

* திருமுருகாற்றுப் படை (உரையாசிரியருரையுடன்) பதிப்பாசிரியர் S. வையாபுரிப் பிள்ளை—மதுரைத் தமிழ்ச் சங்கம். 1943.

கானகந்தனி லேகடந்திடு
காலதளர்ந்ததி தூரம்—பெருங்
காதலாலந்த காரம்—மிகுங்
கங்குலாகிய நேரம்—தனிற்
கருதிவந்தெனை மருவினலதைக்
காணில் மெத்த விசாரம்.

தலைவன் இரவில் வருகின்றானே; மலையைக் கடந்து வரும் போது எத்தனை இடர்கள்; கொடிய விலங்குகள், மலைப் பாம்புகள், ஆழமான நீர் நிலைகள், அங்கு வாயைப் பிளந்து விண் நோக்கும் முதலைகள். கபிலர் குறிஞ்சிப் பாட்டில் பேரிடர்களைக் கருதாது தன்னை அடையவரும் தலைவன் நிலையறிந்து வருந்தும் தலைவியின் கவலையை உரைக்கிறார்.

கங்குல்

அளைச்செறி யுழுவையு மாளியு முளியமும்
புழற்கோட் டாமான் புகல்வியுங் களிறும்
வலியிற் றப்பும் வன்கண் வெஞ்சினத்து
உருமுஞ் சூரு மிரைதே ரரவமும்
ஒடுங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழங்கும்
கொடுந்தாள் முதலையு மிடங்கருங் கராமும்
நூழிலு மிழுக்கு மூழடி முட்டமும்
பழுவும் பாந்தளு முளப்படப் பிறவும்''

உளவே என்று நெஞ்சில் உளைகிறாள் தலைவி.

'பாதிமாமதி வேணியார் தரு பாலனே' என்று விளித்துப் 'பாழுங்கான் வழி மேலே வந்து' தன்னை மேவுவதில், தலைவனுக்கு ஏற்படக்கூடிய ஆபத்துகள் ஒரு பால்; மற்றொரு பால் ஊரறிந் தால் தனக்கேற்படும் அலர் என்று தலைவி அஞ்சுகிறாள்.

''அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலரறியார் பாக்கியத் தால்''

என்று தலைமகன் உரைத்தாலும்,

''ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்''

என்பது தலைவியின் கூற்று.

''வீட்டில் என்பால் சந்தேகம். கல்யாணம் செய்து கொள்வதே விவேகம்,'' என்று தலைவி தலைவனிடம் உரைக்

கிருள். "கொஞ்சி வாழவும் நெஞ்சிலே பயம். கிழப் பேயோ உறங்குவதில்லை. நீ வரக் கண்டு நாயோ குலைக்கும். பெற்ற தாயோ மிகக் கோபி," என்று சொல்கிருள் தலைவி. பொறுத்திருக்குமாறு தலைவனைத். தலைவி வேண்டுகிருள். இத் தொல்லை தீர ஊரெல்லைக்கு வாவென்ருலும் வந்து தலைவனுடன் உடன் போக்கு மேற்கொள்ளவும் உடன்பாடு உண்டு என்றும் தன் மன நிலையை அறிவிக்கிருள் தலைவி. இருவரும் கூடியிருக்க நல்ல காலம் வாராது இராது என்ற இரு எதிர்மறைச் சொற்களில் தலைவி தன் உடன்பாட்டை மொழிகிருள்.

தேனிரைந்திசை பாடுவண்டினம்
சேர்கடம்பணி தோளா—அன்பர்
சிந்தைமேவிய தாளா—வள்ளி
தெய்வயானை மணுளா—உம்பர்
சேனையாள்சிவ ஞானமாபுரி
திகழுந்தீன தயாளா

கானகந்தனி லேநடந்திடு
கால்தளர்ந்ததி தூரம்—பெருங்
காதலாலந்த காரம்—மிகுங்
கங்குலாகிய நேரம்—தனிற்
கருதிவந்தெனை மருவினுலதைக்
காணில்மெத்த விசாரம்

பாதிமாமதி வேணியார் தரு
பாலனே பல காலே—இங்கு
சாலவே மையர் போலே—இந்தப்
பாழுங்கான் வழி மேலே—வந்து
பாவியா மெனை மேவினு லதைப்
பழிக்கு மூரறிந் தாலே.

வேதனைக்கிட மாகுதேவடி
வேலாநீ கொள்ளும் மோகம்—அதில்
விளையுந்துன்பம னேகம்—எங்கள்
வீட்டில் யார்க்குஞ்சந் தேகம்—இனி
வேணுமாகிற்கல் யாணஞ்செய்து பின்
மேவலேநல்வி வேகம்.

கொஞ்சிவாழவும் நெஞ்சிலே பயம்
கொள்ளுதே யினி நீயும்—வரக்
கூடுமோ கிழப் பேயும்—துயில்
கொண்டிடாள் கடு நாயும்—கண்டு

குலைக்குமென்றுளம் மலைக்குதே மிகக்
கோபியாம் பெற்ற தாயும்.

தஞ்ச மென்றவர் சஞ்சலந் தவிர்
சாமிநீ யிந்த சாலம் —செய்யத்
தகுதியோ சில காலம்—சென்று
சார்வதேயனு கூலம்—கிணறு
தங்குதண் புனல் பொங்கு வெள்ளத்தில்
தப்புமோ வெனும் ஞாலம்.

தூயவாரிதி மேய வாலிலை
துஞ்சுமால் மருகோனே—இதற்
கஞ்சினேன் மிக நானே—உனைக்
கெஞ்சியே புகல் வேனே—யிந்தத்
தொல்லை தீரவே றெல்லைவர் வெனச்
சொல்லினும் புரி வேனே.

காயுஞ்சூரனை மாய நூறிய
கர்த்தனே யென் றன் மீது—கோபங்
காட்டியே ஓவொண் ணாது—இன்று
கலவி செய்யத் தகா து—என்றுங்
கருத்திலே தய விருத்தல் வேணுநற்
காலம் வாரா திராது.

(தொடரும்)

---

## முன்னாள் உயர்நீதிமன்ற நடுவர், டாக்டர் எஸ். மகராசன் அவர்கள் மறைவு

முன்னாள் உயர்நீதிமன்ற நடுவரும், ஆங்கிலம், தமிழ் இரண்டிலும் சிறந்த எழுத்தாளரும் பேச்சாளரும் தமிழ்மொழியிடத்தும் சைவ சமயத்திலும் நீங்காப் பற்றுடையவரும், தமிழிசைச் சங்கத்தின் தலைவரும், நம் கழகத்திடமும், கழக ஆட்சியரிடமும் நெருங்கிய தொடர்பும் பற்றும் கொண்டவருமான டாக்டர் எஸ். மகராசன் அவர்கள் 9—9—82இல் சென்னையில் தமது 69ஆம் அகவையில் இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து, ஆற்றொணாத் துயருறுகின்றோம்,

மறைந்த நடுவர் அவர்களின் குடும்பத்தார்க்கும், உற்றார், உறவினர் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். இப் பெரியாரின் வாழ்க்கை வரலாறு அடுத்த இதழில் இடம்பெறும்.

# திரு அம்பர்ப் பெருந்திருக்கோயில்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம். பி. பி. எஸ்., டி. ஓ.]

தமிழகத்தில் சங்க காலத்தில் கோயில்கள் மரத்தால் அமைக்கப்பட்டன. பிறகு களிமண் சுவரெடுத்து மரக்கூரை வேயப்பட்ட களிமண் கோட்டங்கள் தோன்றின. அதன்பின் செங்கல் சுண்ணும்பு இவற்ருல் சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டங்கள் கட்டப்பட்டன. கி. பி. மூன்ரும் நூற்ருண்டு வரையில் கோயில் கட்டப் பயன்படுத்தும் பொருள்களில்தான் மாற்றமிருந்ததே தவிர, கோயில் அமைப்பு முறையில் பெரும் மாறுதல்கள் தோன்றவில்லை. கி. பி. ஐந்தாம் நூற்ருண்டில் வாழ்ந்தவனுகக் கருதப்படும் கோச்செங்கட் சோழனே கோயில் கட்டட அமைப்பு முறையில் புரட்சிகரமானதொரு மாறுதலைச் செய்வித்தான். அதுவரையில் தரை மட்டத்தில் கோட்டங்கள் என்ற பெயரில் அமைந்திருந்த கோயில்களை உயர்த்தி, மேடை போன்றதொரு உயர்ந்த தளத்தின்மீது அமைத்து மாடக் கோயில்களாக்கி மகிழ்ந்தான்.

கோச்செங்கட் சோழன் இறைவனுக்கு எடுப்பித்த இம்மாடக் கோயில்களைப்பற்றி, திருமங்கையாழ்வார்,

"இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோள் ஈசற்கு
எழில்மாடம் எழுபதுசெய் துலக மாண்ட
திருக்குலத்து வளச்சோழன்",

என்று தம் பெரிய திருமொழியின் திருநறையூர்ப் பதிகத்தில் போற்றிப் புகழ்கின்ருர். இதையே அப்பர் அடிகள் 'பெருங் கோயில் எழுபத்தெட்டு' என்று தம் திரு அடைவுத் திருத் தாண்டகத்தில் கோச்செங்கணுன் எடுப்பித்த கோயில்களின் எண்ணிக்கையாகக் கூறிப் போந்தார்.

கோச்செங்கணுன் கட்டியதாகக் கருதப்படும் எழுபதிற்கும் மேற்பட்ட இம் மாடக் கோயில்களுள் இன்று காணக் கிடைப் பவை மிகச்சிலவே. அவற்றுள் ஒன்று திரு அம்பர்ப் பெருந் திருக்கோயில். இக் கோயில் தஞ்சை மாவட்டத்தில் மயிலாடு துறையிலிருந்து நன்னிலம் செல்லும் பெருவழியில், பூந்தோட் டத்திற்குத் தென்கிழக்கில் மூன்று கிலோ மீட்டர் தொலைவில், காரைக்கால் சாலையில் அம்பர் என்னும் தலத்தில் அமைந்துள்

## ❊ அம்பர்ப் பெருந் திருக்கோயில் ❊



அம்பர்ப் பெருந் திருக்கோயிலின் முகப்புத் தோற்றம்
வலப்புறம் தெரிவது அம்மன் கோயிலின்
நுழைவாயில் மண்டபம்



அம்பர்ப் பெருந் திருக்கோயிலின் தெற்குப்
பார்த்த நுழைவாயில்

[பக்கம் 22




திரு. ஏ. பி. சி. வீரபாகு

தோற்றம் :
5—5—1915

மறைவு :
13—8—1982

ளது. இக் கோயிலைச் சம்பந்தர் பெருமான் பாடியுள்ளார். அப் பதிகத்தின்,

"அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே"

என்ற வரிகளும்,

"ஐயநன் பொருபுனல் அம்பர்ச் செம்பியர்
செய்யகண் ணிறைசெய்த கோயில் சேர்வரே"

என்ற வரிகளும் இம் மாடக்கோயிலை எடுப்பித்த பெருமகன் கோச்செங்கட் சோழனே என்பதை உறுதி செய்கின்றது.

சிற்ப வேலைப்பாடுகளற்ற எளிய மூன்றுநிலைக் கோபுரத் துடன் கூடிய, கிழக்கு நோக்கிய வாயிலின் வழியே உள் நுழைந் ததும் நம்மை எழிலார்ந்த தோற்றத்துடன் எதிர்கொள்கிறது இறைவனின் மாடக்கோயில். இதன் வடக்குப் புறத்தில், அம்மன் கோயில் தரைமட்டத்தில் அமைந்துள்ளது. அம்மன் கோயிலின் நுழைவாயில் செவ்வக வடிவமான மண்டபமாய் அமைந்துள்ளது. அம்மனின் பெயர் பூங்குழல் நாயகி.

கோயில் வெளித் திருச்சுற்றில் மாடக்கோயிலை நோக்கியபடி அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய பலிபீடம் ஒன்றும், அதை யடுத்து இறைவனை நோக்கியபடி பெரிய நந்தி ஒன்றும் தரை மட்டத்தில் அமைந்துள்ளன. இத் திருச்சுற்றில் கதிரவன், வைரவர், பிள்ளையார், திருமகள், முருகன், சண்டிகேசுவரர் முதலிய உடன்கூட்டத் தெய்வங்களின் சுற்றுலைக் கோயில்கள் அமைந்துள்ளன.

மாடக்கோயிலின் நுழைவாயில் தெற்குப்புறத்தில் பதினைந்து படிக்கட்டுகளுடன் அமைந்துள்ளது. பத்தாவது படியில் இடப் பக்கம் ஒரு திருப்பம் கொடுத்து, மூன்று படிகள் அமைத்து, மாடக்கோயிலுக்கென ஒரு வெளித் திருச்சுற்று மேடைபோல அமைந்திருக்கிறது. இதில் நடந்தால் மாடக் கோயிலையே ஒரு சுற்றுச் சுற்றிவிடலாம்.

மாடக்கோயிலுக்குள் நுழைந்ததும் முன்மண்டபம் நம்மை வரவேற்கிறது. இதன் கூரையில் ஒரு பாதி திருவீழிமிழலை வௌவால் மண்டப அமைப்புடனும், மறு பாதி தள அமைப் புடனும் உள்ளது. இம் முன்மண்டபத்திலுள்ள சிற்பங்களுள் கோச்செங்கட் சோழரின் திருஉருவம் குறிப்பிடத்தக்கது. முன்

மண்டபத்திலிருந்து நடு மண்டபத்திற்குள் நுழைய இரு வாயில்கள் உள்ளன. இந்நடு மண்டபத்தின் வடக்குப்புறத்தில் நடராசரின் செப்புத் திருமேனி நட்சத்திரத் திருவாசியுடன் அமைந்துள்ளது.

இக் கோயிலில் மூன்று கருவறைகள் உள்ளன. இம் மூன்றுக்கும் நடுமண்டபத்திலிருந்து மூன்று தனித்தனி வாயில்கள் அமைந்துள்ளன. இடையில் நடுநாயகமாக உள்ள வாயிலை வாயிற்காப்போர் காக்கின்றனர். இவ்வாயிலுள் நுழைந்ததும் உள் மண்டபமும், அதையடுத்துக் கருவறையும் அமைந்துள்ளன. கருவறையில் பிரம்மபுரீசுவரர் இலிங்கத் திருமேனியராய் ஆவுடையார்மீது எழுந்தருளி உள்ளார். இலிங்கத்திற்குப் பின்னால் பரமசிவன், பார்வதி, கந்தன் திருமேனிகள் அமைந்துள்ளன. இக் கருவறையின் விமானம் அறுகோண வடிவில் அமைந்த பெரிய விமானமாகும். இறைவனுக்கு வலப்புறமுள்ள கருவறையில் சோமாஸ்கந்தரும், இடப்புறமுள்ள கருவறையில் நடராசரும் செப்புத் திருமேனியராய்க் காட்சியளிக்கின்றனர்.

மாடக்கோயிலின் வெளிச்சுவரில் தெற்குப்புறத்தில் கீழ் மட்டத்திலுள்ள தெய்வப் புரையில் பிள்ளையாரும், மேடைப்புறத்திலுள்ள தெய்வப் புரையில் தென்திசைக் கடவுளும் உள்ளனர். மேற்குப்புறத்தில் மேடைப் பகுதியிலான தெய்வப்புரையில் திருமாலும், வடக்குப்புற மேடைப்பகுதி தெய்வப் புரைகளில் நான்முகனும், கொற்றவையும் காணப்படுகின்றனர்.

இம் மாடக் கோயிலிலிருந்து நான்கு கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டுள்ளன. இவை 1918ஆம் ஆண்டிற்கான தென்னிந்தியக் கல்வெட்டுக் குறிப்பேட்டில் 236ஆம் எண்ணிலிருந்து 239ஆம் எண் வரை தரப்பட்டுள்ளன. இக் கல்வெட்டுகள் கோயில் கருவறையின் மேற்குப்புறச் சுவரிலும், சோமாஸ்கந்தர் கோயிலிலும் உள்ளன. சோமாஸ்கந்தரின் கோயிலில் இருக்கும் இராசராச சோழதேவரின் பத்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு தவிர, ஏனையவை துண்டு துண்டான கற்களில் வெட்டப்பட்டுள்ளன. இப் பத்தாம் ஆண்டுக் கல்வெட்டு உய்யக் கொண்டார் வளநாட்டு, அம்பர் நாட்டு, வைகாவூராகிய எதிரிலிச் சோழ நெற்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் எதிரிலிச் சோழீச்சுரமுடையாருக்கு அம்பர் என்னும் இவ்வூரில் உள்ள வணிகன் இரண்டு விளக்குகள் கொடுத்த செய்தியைக் கூறுகிறது. ஏனைய மூன்று கல்வெட்டுகளில் இரண்டு இராசராச தேவரின் ஐந்தாம், ஒன்பதாம் ஆட்சியாண்டுகளில் வெட்டப்பட்டவை. இவை நிலங்கள் பெருவிலைக்குத் தரப்பட்டதையும், மூன்ரும் குலோத்

துங்க சோழன் மதுரையும், ஈழமும், கருவூரும் பாண்டியன் முடித் தலையும் கொண்டதையும், செய்திகளாய்த் தருகின்றன. ஒரு கல்வெட்டு மேலூராகிய அரித்துவ நெற்குன்றம் என்னும் ஊரைப்பற்றிக் குறிப்பிடுகிறது.

நாயன்மார்களுள் ஒருவரான சோமாசிமாற நாயனர் இத் தலத்திற்கு அருகிலுள்ள அம்பர் மாகாளத்தில் வாழ்ந்தவர். கடுமையான வேத வேள்விகள் செய்தவர். தாம் ஒருமுறை செய்த சோமயாகத்தில் அவிர்ப்பாகமேற்க, திருவாரூர்த் தியாக ராசரையே வரவழைக்க விழைந்தவர். இதற்கு வாய்ப்பாகச் சுந்தரருக்கு மிகவும் பிடித்த தூதுளங்கீரையைப் பரவையாரிடம் கொடுத்து அதன்மூலம் சுந்தரர் அன்புக்குப் பாத்திரராகி, சுந்தரர் வழியே திருவாரூர்த் தியாகராசப் பெருமானைத் தம் வேள்வியில் அவிர்ப்பாகம் ஏற்க வரச்செய்யுமாறு வேண்டியவர்.

சுந்தரரும் தியாகராசப் பெருமானிடம் வேண்ட, தியாகராசப் பெருமான் ஒப்புதல் தந்தார். சோமாசிமாற நாயனரின் வேள்வி நடந்த இடத்தில் அவிர்ப்பாகமேற்க இறைவன் வரப்போகும் செய்தியறிந்து மறையவர்கள் கூடி நின்றனர். அப்போது அங்கே பறைச்சத்தத்துடன் இழிஞன் வடிவில் ஒரு புலையன் வந்தான். அவனருகில் மதுக்குடத்தைத் தலையிலேந்திய புலைச்சியும், அவர் களைத் தொடர்ந்து நான்கு நாய்களும், புலைக்கூட்டமும் வந்தன. இதைக்கண்ட மறையவர்கள் பொறுக்கமாட்டாது ஓடினர்கள். கண்களை மூடி, இறைநினைவில் ஆழ்ந்திருந்த சோமாசிமாற நாய ஞர் ஒலிகேட்டு விழிதிறக்க இறைவனும், இறைவியுமே அங்கு நேரில் எழுந்தருளக் கண்டார். நான்கு மறைகளே நாய்களாகவும், பூதக் கூட்டங்களே புலையர்களாகவும் காட்சி தந்தனர். சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தில் இம் மெய்சிலிர்க்கும் காட்சியைப் படம் பிடித்துக் காட்டுகிருர். சோமாசிமாற நாய ஞரின் வேள்விச்சாலை அம்பருக்கும், அம்பர் மாகாளத்துக்கும் இடையே இருந்ததாகக் கூறப்படுகிறது. இப்போது அங்கே பாழடைந்த ஒரு பழைய கோயில் இருக்கிறது. வைகாசி ஆயிலி யத்தன்று இங்கே வேள்வித் திருவிழா சிறப்பாக நடைபெறு கின்றது.

கோச்செங்கட் சோழனல் எழுப்பப்பெற்று, சோமாசிமாற நாயனரின் வரலாற்றுடன் பின்னிப் பிணைந்திருக்கும் இக் கோயில் செங்கல் திருப்பணியாய் இருந்தமையால் காலப்போக்கில் அழி வுற்றது. பின்னல் வந்த சோழ மன்னர்களுள் மூன்ரும் குலோத் துங்க சோழனைப்பற்றிய செய்திகளும், அவன் மகனெனக் கருதப் படும் மூன்ரும் இராசராசனின் செய்திகளும் கொண்ட கல்வெட்

டுகள் இக் கோயிலில் காணப்படுவதால் இதன் பிற்காலத் திருப்பணி மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் தொடங்கியதாகத் துணியலாம். வரலாற்றுச் சிறப்பும், புராணச் சிறப்பும் மிக்க இம் மாடக்கோயில் இன்று சிறப்புகள் குறைந்த நிலையில், வருவாயின்றி, வருவாரின்றி இருக்கும் நிலை மாற்றப்படல் வேண்டும். இவ்வழகிய கோயிலைச் சுற்றிக் காட்டிச், செய்திகள் தெரிவித்து, அன்பு பாராட்டிய கோயில் கணக்குப் பிள்ளை திரு. கணேசமூர்த்தி, மணியம் திரு. சிவப்பிரகாசம், சிவாச்சாரியார் சோமசுந்தர குருக்கள் முதலியோரின் நல்நினைவுகளை மறத்தல் இயலாது.

———

## தமிழ்த்தாய் வணக்கம்

[தமிழேறு க. இராயவேல், அறி. இ., (க. மு.)]

சொக்கக்கனி ஒக்கத் திகழ்தரு
அட்டப்பர முற்றத் தெளிகையில்
சுற்றித்தினம் ஒற்றைத் தரம்வரும் புவிமீதில்
தொற்குப்பழந் தொற்குப் பழமென
சொற்குப்பட இற்றைத் தினமதில்
கற்கத்துணை நிற்கத் தடையெனும் ஒருநாளில்

மக்கட்பெரு வட்டக் குமரியில்
நெட்டைப்புகழ் குற்றத் தலமதில்
மச்சக்குடி மெச்சித்தலைதர உயிர்வாழ்வில்
மட்டத்தனை அற்றுப் பெருமையின்
உச்சித்தனம் நத்திக் கொளமனம்
வைத்துத்திரு நட்டுப் பொலிவுடன் உதித்தோனே

திக்கெட்டிலும் பட்டத் தரசியின்
மிக்குப்பொலி வெட்டத் தனிமுதல்
செப்பத்துடன் தக்கக் கலைகளும் அறிவாளும்
செப்பற்கரு மற்றத் துறைகளும்
பக்கத்தவை ஒட்டிக் கிளைகளும்
சித்தைக்கினி பற்றத் தகுவிதம் வளர்ந்தோங்க

எக்கட்டிலு மக்கிச் சுடரறு
சிக்கற்றிடு கற்புச் செறிவுடன்
இக்கட்டினை வெற்றிக் கனிவுடன் கடந்தேற
எத்தத்தெரி துட்டப் பதரினை
எத்தெத்தனை வெட்டித் தளிவிடு
எற்றெற்றிலும் நிற்கத் திறமுடை தமிழ்த்தாயே.

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[தமிழ்த்தொண்டர் கோ. முத்துப்பிள்ளை

மகாகவி பாரதி நகர், சென்னை-600 039.]

## 9. HELICOPTER

நண்பர் தாமசு இராசேந்திரன் ஒரு சிறந்த கவிஞர். இனிய பாடல்களை இயல்பாக இயற்றவல்லவர். கவிதை நலம் வாய்ந்த இவர், ஆட்சி மொழித் துறையிலும் ஆர்வம் மிக உடையவர். சிந்தனையில் ஆழ்ந்து, கலந்தாய்வுகள் செய்து, ஆழமுடைய சொற்களை அகழ்ந்தெடுப்பார். இவர் ஒருநாள் "ஐயா helicopter என்பதற்குத் தமிழ் என்ன" என்னும் வினவினை எழுப்பினர். இந்தச் சிறிய வினு, பெரிய புயலை, ஆம், ஆராய்ச்சிப் புயலை, எழுப்பிவிட்டுவிட்டது என்று சொல்லத்தான் வேண்டும். இந்தப் புயலில் சிக்கிய எனக்கு, என்னுடைய "பேருந்து நண்பர்கள்" பெரிதும் வழிகாட்டினர்.

குளம், குட்டைகளின் கரைகளையும் ஏரி, ஆறுகளின் விளிம்புகளையும் காக்கும் பணி எந்நேரமும் நடைபெற்று வருகின்றது. வெள்ளம் வருமுன்னர் பள்ளங்கள் நிரப்பப்பெறுகின்றன. ஆயினும் திடுமெனப் புயல் புகுந்து மழை கொட்டினுல், தடுக்க முடியாத பெருவெள்ளம் ஊரெங்கும் நுழைந்து ஊறு செய்து விடுகின்றது. ஒரே தண்ணீர்க் காடாகக் காட்சி தருகின்றது. உண்ண உணவின்றி மக்கள் தவிக்கநேர்கின்றது. இத்தகைய நேரங்களில் உதவுவது வான் பணியாற்றும் வானூர்தியே (helicopter) ஆகும். வெள்ளத்தால் ஏற்பட்டுள்ள சேதத்தை நேரில் கண்டறியவும், உணவுப் பொட்டலங்களை உதிர்த்து வரவும் உதவுவது இந்த வானூர்தியேயாகும். நினைத்த இடத்தில் இறங்கவும் நினைத்த இடத்திலிருந்து மேலெழவும் வாய்ப்புடைய வானூர்தி, இந்த நேரெழுகை வானூர்தியாகும்.

Aeroplane இங்கு வந்த பிறகுதான் "வானூர்தி" என்னும் சொல்லை நாம் ஆக்கிக்கொண்டோமென்று சிலர் தவருக எண்ணக்கூடும். புறநானூறு என்னும் கருவூலம் தருகின்ற பொற்காசு ஒன்றினை எடுத்துப் பார்ப்போம். "சேற்றுவளர் தாமரை" என்று தொடங்கும் பாடலின் ஒரு பகுதியை இங்கே வரைகின்றேன் :

"உரையும் பாட்டும் உடையோர் சிலரே
மரையில போல மாய்ந்திசினோர் பலரே

புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான ஊர்தி
எய்துப என்பதம் செய்வினை முடித்தெனக்
கேட்பல்............''

"புகழும் பாட்டும் உடையோர் சிலர்தாம். தாமரை இலையினைப்போல மாய்ந்தவர்கள் பலராவர். புலவர் பாடும் புகழுடையவர்கள், தாம் செய்யும் நல்வினையை முடித்து, வலவன் ஏவா வானவூர்தி ஏறி விண்ணுலகு செல்வர் என்று அறிவுடையோர் சொல்லக் கேட்டுள்ளேன்'' என்கிறார் உறையூர் முதுகண்ணன் சாத்தனார்.

வலவன் ஏவா வானவூர்தியை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தால் Pilotless aeroplane என்றாகும். ''வானவூர்தி'' என்னும் இனிய சொல்லை ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே அறிந்திருந்தவன் தமிழன் என்பதை எண்ணும்போது நம் உள்ளம் களி துள்ளி எழுகின்றதன்றோ?

Helicopter என்னும் சொல் கிரேக்க மொழியிலிருந்து பிறந்த சொல்லாகும். இது Screw, Wing என்னும் இரண்டு சொற்களின் அடிப்படையில் அமைந்துள்ளது. ஆகவே அதனைத் ''திருகிறக்கை வானூர்தி'' என்று வழங்குதல் பொருத்தமாக இருக்கலாம். ஆயினும் ஒருசில விளக்கங்களையும் கருதிப் பார்ப்போம்.

வகைவகையான விளக்கங்களை வாரி வழங்குகின்றன வண்டமிழ் அகராதிகள். அழகழகான அரிய பொருண்மைகளை ஆங்கில அகராதிகளும் அள்ளித் தருகின்றன. இது செங்குத்தாக மேலே எழவல்ல வானூர்தி வகையைச் சேர்ந்தது என்பது ஒரு விளக்கம். செங்குத்தாக ஏறி, செங்குத்தாக இறங்கவல்ல, திருகு வானூர்தி என்பது இன்னொரு விளக்கம். இதில் வருகின்ற ''திருகு'' என்னும் சொல்லைக் கவனித்தால், Screw Wing என்னும் விளக்கத்தில் உள்ள Screw என்பது மட்டும் இங்கே வந்துள்ளதைத் தெரிந்துகொள்ளலாம்.

இந்த வானூர்தி இயங்குகின்ற முறையை ஆங்கில அகராதிகள் இனிது விளக்குகின்றன. அவை Rotor என்னும் சுழல் பகுதியைச் சுட்டிக் காட்டுகின்றன. மேலிறக்கை வானூர்திக்கு இதுதான் மேலான விளக்கம் என்று சொல்ல வேண்டும். சுழல் பகுதியோடு இறக்கையும் இணைக்கப்பட்டுள்ளது. இறக்கை என்னும் சொல்லை எண்ணியவுடனேயே பொதுவகையான வானூர்திகள் அனைத்திற்கும் முன்பக்கம் சுழலும் Propeller

இருக்கிறதே, அதுவும் இறக்கைதானே என்று வினவத் தோன்றும். ஆயினும் Propeller என்ருல் ''சுழல் விசிறி'' என்ருகுமேயல்லால், ''சுழல் இறக்கை'' என்ருகாது என்பதை உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

சுழலிறக்கையைச் சுழலிறகு என்று சுருக்கினுலென்ன என்பது அடுத்து எழும் வினுவாகும். தனிப்பட்ட ஓர் இறகன்று, பல இறகுகளின் தொகுப்பே இறக்கையாகும். ஆகவே இறக்கையே சிறப்பாக அமைவதைக் காண்கின்ருேம்.

Rotarywing aircraftதான் helicopter. மொழிபெயர்ப்பிற்காகச் சுழன்று சுழன்று வந்தோம். 'சுழலிறக்கை வானூர்தி'யில் ஏறி வந்துவிட்டோம்.

Helicopter = சுழலிறக்கை வானூர்தி.

———

## 'வள்ளுவனே என்வழிபடு தெய்வம்'

[வேலூர் ம. நாராயணன், எம். ஏ.]

வள்ளுவனே என்வழிபடு தெய்வம்—அவன்
　　வான்மறையே என்வாழ்வின் விளக்கம்—குறள்
கொள்கைகளே என்னுயிர்நிலே யாகும்—எனுங்
　　கொள்கையன் எவனே, அவனே தமிழன்!

தெள்ளு தமிழ்த்தாய் மூத்தமகன்—அருந்
　　தென்னவர் பண்புகள் காத்தமகன்—புவி
உள்ளவரை அவன்மொழி வாழும்—இதை
　　உள்ளுதொறும் பல நலஞ் சூழும்!

வெள்ள மெனப்பல நூல்கள்வரும்—வீண்
　　வெற்றுக் கதைகளேப் பேசிவரும்—நம்
உள்ளந் தெளிவுறக் குறள்போலே—ஓர்
　　உயரிய பனுவலும் இனிவருமோ...!

பள்ளமும் மேடெனப் புரியாது—உயர்
　　பிறவியின் நோக்கமும் உணராது—மிகு
கள்ளமும் கரவுடன் வாழ்பவர்தம்—இரு
　　கண்களேத் திறப்பது குறள்நெறியே!

'வள்ளுவம்' என்னுமோர் ஆழியில்தான்—எங்கு
　　மூழ்கினும் முத்துகள் நாம்பெறலாம்—இனி
தள்ளுவ தள்ளுவம்! தமிழ்மறையை—நம்
　　சிந்தையில் ஏற்றியே போற்றுவமே!

# தென்காசி மதன கோபாலன்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்,

கூட்டுறவுப் பதிவாளர் (ஓய்வு)

23, கல்யாண்ஜி வீதி, பொள்ளாச்சி.]

சைவத்தில் முருகன் என்றால், வைணவத்தில் கண்ணனைக் கொள்ளலாம். முருகன் தெய்வக் குழந்தை, கண்ணன் குழந்தைத் தெய்வம். கார்மேனிச் செங்கண் நெடியமாலின் பத்துப் பிறவிகளுள் கண்ணன் பிறப்புதான் அன்பர்களின் மனத்தை மிகவும் கவர்ந்த ஒன்றும். கண்ணன்தான் குழந்தையாகவும் இளைஞனாகவும் வணங்கப்படுகிறான். எனவே அவனிடம் காட்டும் அன்பு தாய் குழந்தையிடம் காட்டும் அன்பு, மனைவி கணவனிடம் காட்டும் அன்பு எனப் பலவகையாக உள்ளது. இது கண்ணன் பிறப்பிற்கு உள்ள தனிச்சிறப்பு.

பெரியாழ்வார் கண்ணனைத் தம் குழந்தையாகவும் தம்மைத் தாயாகவும் கொண்டு பாடிய திருமொழிகளில், தாய் தன் குழந்தையை எவ்வாறு பாராட்டிச் சீராட்டித் தாலாட்டி வளர்ப்பாள் என்பது விளக்கமாகத் தெரிகிறது. தன் குழந்தையிடம் தாயாருக்கு உள்ள உள்ளப்பாங்கைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. சூடிக்கொடுத்த நாச்சியார் பாவை நோன்பு நோற்றுப் பாடியது திருப்பாவையாம். குலசேகர ஆழ்வார் பாடிய தேவகி புலம்பலில் கண்ணனின் குழந்தை விளையாட்டுகள் மிகவும் அழகாகச் சொல்லப்பட்டுள்ளன. மகாகவி பாரதியார் கண்ணனைத் தம் தாய், தந்தை, சேவகன், குழந்தை எனப் பல நிலைகளில் வைத்துப் பாடியுள்ளது கண்ணன் எவ்வாறு இக்காலத்திலும் அன்பர்களின் அன்பைப் பெற்றுவருகின்றான் என்பதை எடுத்துக் காட்டுகிறது.

ஆகம விதிகளின்படி கண்ணன் இருகைகளுடன் அமைக்கப் படவேண்டும். சங்கொடு சக்கரம் ஏந்தும் கையனாகிய திருமால் அணிகலஞ் சூடி மகிழும்பிரான் அல்லவா! எனவே, அவன் கண்ணன் வடிவம் கொண்டபோது அணிகலன்கள் பல அணிந்தவனாக இருக்கவேண்டும். வலக்கையில் வளைந்த குச்சி இருக்க, இடக்கையில் சங்கு இருக்கலாம். கண்ணனை வெண்ணெய் வேண்டி நடனமாடுபவனாகவும் (நவநீத நிருத்ய மூர்த்தி) கானகோபாலன் அல்லது வேணுகோபாலனாகவும் (ஆனிரைகளுடன் கையில் புல்லாங்குழலுடனும் இருக்கவேண்டும்) அர்ச்சுனனுக்குத் தேர்

செலுத்தும் பார்த்தசாரதியாகவும், காளிங்கன் என்ற நச்சரவின் மீது நடனமாடுபவனுகவும் (காளிங்கநிருத்தமூர்த்தி) கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்தவனுகவும் இளங்கண்ணனுகவும், ஆலிலைமேல் பள்ளிகொள்பவனுகவும் (வடபத்ரசாயி) சந்தான கோபாலனுகவும் அமைக்கலாம்.

நெல்லை மாவட்டம் தென்காசியில் பிற்காலப்பாண்டிய மன்னனும் பராக்கிரமபாண்டியன் என்பவனுல் 15ஆம் நூற்ருண்டில் காசிவிசுவநாதர் கோயில் கட்டப்பெற்றது.

''ஆராயினும் இந்தத் தென்காசி மேவும் பொன் ஆலயத்து
வாராததுஓர் குற்றம் வந்தால் அப்போது அங்கு வந்து அதனை
நேராக வேஒழித்துப் புரப்பார் கனை வித்தம் நீதியுடன்
பாரார் அறியப் பணிந்தேன் பராக்கிரம பாண்டியனே''

என்ற கல்வெட்டு அங்குக் காணப்படுவதினின்றும், அக்கால அரசர்கள் கோயிலைப் பாதுகாப்பதை எவ்வாறு போற்றிவந்தனர் என்பதை அறியலாம். இந்தக் கோயில் மண்டபத்தில் எட்டுப் பெரிய கற்றூண்கள் உள்ளன. தெற்கு வரிசையில் அகோரவீர பத்திரர், மன்மதன், மதனகோபாலன், காளி ஆகியோர் காணப் படுகின்றனர். வடக்கு வரிசையில் வீரபத்திரர், இரதி, பதஞ்சலி வியாக்ரபாதருடன் ஆடவல்லான், திருமால் நான்முகனும் ஊர்த் துவதாண்டவமூர்த்தியும் உள்ளனர். இவற்றைத் தவிர வஞ்சிக் கொடி, இளநங்கையர் இருவரும் காணப்படுகின்றனர். இந்த வடிவங்கள் எல்லாம் கல்லிலே கலைவண்ணம் கண்ட நம் முன் ஞேர்களின் கைவண்ணத்திற்கு எடுத்துக்காட்டாக அமைந் துள்ளன. இவற்றுள் மதனகோபாலன் வடிவம் காண்டற்கு அரியது ஒன்ரும்.

மதனகோபாலன் நின்ற நிலையில் எட்டுக் கைகளுடன் விளங்குகிருன். வலப்புறக் கைகள் மூன்றில் தாமரை மலர், பரசு மற்றும் சக்கரம் உள்ளன. இடப்புறக் கைகள் மூன்றில் கரும்பு வில், பாசம், சங்கு ஆகியவை அமைந்துள்ளன. எஞ்சியுள்ள இரு கைகளில் கண்ணனுக்கு உரிய புல்லாங்குழல் காணப்படுகிறது. தலையில் கிரீடமகுடம் அணிந்துள்ளான். அணிகலன்கள் பலவற்றை அணிந்துள்ள அவனது மார்பு, வயிறு போன்றவை இயற்கையாக அமைந்துள்ளன. தான் இசைக்கும் இசையில் தன்னை மறந்து புல்லாங்குழல் ஊதுகிருன் என்பதை அவனது முகம் எடுத்துக்காட்டுகிறது.

கண்ணன் திருமாலின் அவதாரமாக இருப்பினும் மனிதன் என்பதால் இரு கைகளுடன்தான் காணப்படுகிருன். இறைவின்

வடிவிற்கு அதிகமான கைகள் அமைக்கப்படும். இறைவடிவு பொதுவாக நான்கு கைகளுடன் காணப்படும். பேராற்றலைக் குறிக்க எட்டு அல்லது பதினாறு கைகள் அமைக்கப்படும். சிவபெருமானின் திரிபுராந்தகவடிவம், திருமாலின் திரிவிக்ரம வடிவம், சக்தியின் மகிஷாசுரமர்த்தினி வடிவம் ஆகியவற்றில் எட்டுக் கைகள் காணப்படுவது இங்குக் குறிப்பிடத்தக்கது. பஞ்சவருக்காக அரவக்கொடியோனும் துரியோதனனிடம் கண்ணன் தூதுசென்றபோது, கண்ணனைக் கொல்ல, அத் துரியோதனனால் சூழ்ச்சி செய்யப்பட்டதாம். அவ்வமயம் தான் சாதாரண மனிதன் அல்லன்; எல்லாம் வல்ல இறைவன் என்பதை உணர்த்த (விசுவரூபம்) பேருருவம் எடுத்தானும். எனவே, கண்ணனைப் பேராற்றல் படைத்தவன் என்பதைக் குறிப்பால் சுட்டிக்காட்ட இங்குள்ள வடிவிற்கு எட்டுக் கைகள் அமைத்தனர் போலும்.

வீணை சிவபெருமானுக்கு உரிய இசைக்கருவி என்றால், புல்லாங்குழல் கண்ணனுக்கு உரியதாம். கண்ணனது புல்லாங்குழல் இன்னிசையைக்கேட்ட வானவரும், மங்கையரும், பறப்பனவும், விலங்கினங்களும் எவ்வாறு தம்மை மறந்தன என்பதை,

"மருண்டு மான்கணங்கள் மேய்கை மறந்து
மேய்ந்த புல்லும் கடைவாய் வழிசோர
இரண்டு பாடுந் துலுங்காப் புடைபெயரா
எழுதுசித் திரங்கள் போல நின்றனவே"

என்றெல்லாம் பெரியாழ்வார் பாடிப் பாடிப் பரவசம் அடைகிறார். இவ்வாறு இன்னிசை அமுதைப் பொழியும் புல்லாங்குழலை இசைப்பவனாக இங்கே கண்ணன் சிலாவடிவமாக அமைக்கப்பட்டுள்ளான்.

திருமாலின் மகன் மன்மதன்; அவனைக் காமவேள் என்றும் மதனன் என்றும் குறிப்பிடுவர். அவனது வில்—கரும்பு; அம்பு—மலர்கள். இங்குள்ள கண்ணனது இடக்கை ஒன்றில் கரும்புவில் காணப்படுவதால், இவன் மதனகோபாலன் என்ற பெயரினைப் பெற்றான். கரும்புவில்லுடன் கூடிய கண்ணன் வடிவம் ஓர் அரிய படைப்பாகும்.

---

## விருப்பும் வெறுப்பும்

ஒருவரை யொருவர் விரும்புவதன் அடிப்படைக் காரணங்களுள் ஒன்று, இருவரும் மூன்றாவதொரு பேர்வழியை மனமொத்து வெறுப்பதாகும்.

—பெர்ட்ராண்டு ரசில்

# தத்துவக் கவிஞன் தமிழ்க்கவி பாரதி !

[கவிஞர் முத்தெழிலன்]

''கவிஞர்கள் அறிவு வளம் மிக்குடையவராய் இருபப தால் மட்டும் கவி பாடுவதில்லை. அவர்கள் தனித்தன்மை மிகுந்து, திறன் மிக்குடையராய் இருப்பதாலேயே பாடு கின்றனர்.''

என்றார் கிரேக்கப் பேரறிஞர் சாக்ரடீஸ். அவர் கூறிய கூற்று முற்றிலும் உண்மை என்பதற்கு, விடுதலைக்குக் கவிபொழிந்த வித்தகர் பாரதியாரே சிறந்த எடுத்துக் காட்டாவார். அவர் பாடல் ஒவ்வொன்றும், அவரது தனித்தன்மைக்குச் சான்று கூறும் தன்மை வாய்ந்தது. எத்துணை இடுக்கண்கள் வந்துற்ற போதும், அவற்றைப் பொருட்படுத்தாமல் நெஞ்சறிந்த உண்மையைக் கூட்டாமல் குறைக்காமல் இயம்பிய வீரக்கவிஞர் பாரதியார்.

அவர் விடுதலைக்குப் பாடி உரிமை உணர்ச்சி ஊட்டிய தேசியக் கவிஞர் மட்டுமல்லர், சமுதாயக் கெடுதல்களையும் சாடி நல்லறிவூட்டிய கவிஞருமாவார். அவர் எண்ணமெல்லாம் எளியவரும் தெளிவாகப் படிக்கத்தக்க பாடல்களைப் படைக்க வேண்டும் என்பதே. அவர் கவிதையின் வடிவத்தை, கருத்தை, சுவையை அவரே,

''சுவைபுதிது; பொருள்புதிது; வளம்புதிது;
சொற்புதிது; சோதிமிக்க
நவகவிதை, எந்நாளும் அழியாத
மாகவிதை.........''

என்று குறிப்பிடுகின்றார். இஃது எட்டயபுரம் அரசர்க்கெழுதிய ஓலைத்தூக்கு என்னும் பகுதியில் காணப்படினும் அவர் கவிதைகள் அனைத்திற்கும் பொருந்தும். அவர் பாடல்கள் எந்நாளும் நின்று நிலவ வேண்டும் என்ற எண்ணத்துடன்—பலவகை வண்ணத்துடன் பாடப்பட்டவையே எனலாம். குயிலைப் பாடினார்; மயிலைப் பாடினார்; காக்கையைப் பாடினார்; கண்ணனைப் பாடினார். அவர் பாடாத பொருள் இல்லை என்னும்படி பாடினாலும் அவற்றைப் பிறரைப் போன்று அவர் பாடவில்லை, புதுமைக் கண்களால் கண்டு பாடினார். அவரொரு புதுமைக் கவிஞர்! அதனால்தான் அவர் தத்துவங்களை அந்நாளைய அவையினர் பலரால்—உட்கொள்ள முடியவில்லை.

ஆனால், அவர் விழைந்தளித்த எண்ணங்கள் இன்று மக்க ளால் விழுமிய வைரங்களாக ஏற்றுப் போற்றப்படுகின்றன. இதனை அவர் அன்றே உறுதியாக நம்பியிருந்தார். அவர் கவிதைகள் நல்ல கவிதைகள்—வல்ல கவிதைகள் என்பதை அவரே, 'புனர் ஜென்மம்' என்னுங் கட்டுரையில்,

"நெடுங்காலத்துக்கு முன்னே எழுதப்பட்ட நூல்கள், அக் காலத்துப் பாஷையைத் தழுவினவை. காலம் மாற மாறப் புதிய பதங்கள் உண்டாகின்றன. புலவர் அந்தந்தக் காலத்து ஜனங்களுக்குத் தெளிவாகத் தெரியக்கூடிய பதங் களையே வழங்க வேண்டும். அருமையான காட்சிகளை எளிமை கொண்ட நடையிலே எழுதுவதுதான் நல்ல கவிதை"

என்று எடுத்துரைத்துள்ளார். இஃது அவர் கவிதை நல்ல கவிதை என்பதற்கு, அவரே தந்துள்ள ஆணித்தரமான சான் றுரை எனலாம்.

அத்தகைய நல்ல கவிதைகளில் வித்தகன் பாரதி, இன்றைய தத்துவங்கள் அனைத்திற்கும் அன்றே வித்திட்டுள்ளான் என்றால் வெற்றுரையன்று, முற்றிலும் உண்மை. இன்றைய கல்விப் புரட்சி முதல் காரிகையர் புரட்சி வரை, கவிதைச் சாரதி கவிஞர் பாரதி கூறாத தத்துவம் எதுவும் இல்லை. அவற்றுள் ஒருசில வற்றைக் கோடிட்டுக் காட்டுவதே இக் கட்டுரையின் நோக்க மாகும்.

"நமக்குத் தொழில் கவிதை; நாட்டிற் குழைத்தல்;
இமைப்பொழுதும் சோரா திருத்தல்..."

என்ற எண்ணத்தினரான பாரதி பொது உடைமைக் கருத்துக் களைப் பல இடங்களில் முழக்கியுள்ளா ரெனினும், உணவின்றி உருக்குலைந்து வாடுவோரை எண்ணும்பொழுது எரிமலையாகி விடுகிறார். தீக்குழம்பில் எழுதுகோலைத் தோய்த்து,

"தனி ஒருவனுக்கு உணவில்லை யெனில்
செகத்தினை அழித்திடுவோம்"

என்று எழுதி உலகை எச்சரிக்கின்றார். வள்ளுவருக்குப் பின் துள்ளிவரும் வேலாக, துயருறுவோருக்குத் துடித்தெழுந்த கவிஞர் பாரதி என்றால் மிகையாகாது. அவர் ஒரு முழுமையான இந்தியப் பொது உடைமைவாதி எனலாம். அவர் பொது உடைமைக் கொள்கை புதுமையானது. என்னவென்கிறீர்களா? இதோ பாரதியே கூறுகின்றார் கேளுங்கள்.

"எல்லாரும் ஓர்குலம்; எல்லாரும் ஓர்இனம்;
எல்லாரும் இந்திய மக்கள்!
எல்லாரும் ஓர்விலே; எல்லாரும் ஓர்நிறை;
எல்லாரும் இந்நாட்டு மன்னர்."

அன்று பாரதி கூறியது, இன்று குடியாட்சியாக மணக்கிறது. இத்தகைய நிலே ஏற்படும் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்த காரணத்திஞல்தான்,

"ஒப்பில்லாத சமுதாயம் உலகிற்கு ஒரு புதுமை"

என்று அவர் தலே நிமிர்ந்து கூறமுடிந்தது. தம் நாட்டின்மீது அத்துணே நம்பிக்கை அவருக்கு! அவருடைய தாயகப்பற்றிற்கு இணேயாக எதனேயும் கூற முடியாது எனலாம். அத்துணேப் பற்று இருந்த காரணத்திஞல்தான்,

"பெற்ற தாயும் பிறந்த பொன்ஞடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே"

என்று அவரால் இறுமாந்து எழுத முடிந்தது. தம் தாய் நாட்டில் இருந்த இழிசெயல்களேயும் சாடுவதற்கு அவர் தயங்கவில்லே. அத்தகைய செயல்கள் இனி, தம் நாட்டில் இருக்க முடியாது என்றும் எண்ணுகின்ருர். அந்த எண்ணத்தில்,

"மனிதர் உணவை மனிதர் பறிக்கும்
வழக்கம் இனி உண்டோ!"

என்று கேட்டு, அவ் வழக்கம் ஒழியும்—ஒழிக்கவேண்டும் என்று நமக்கு மறை மொழியாகக் கூறுகின்ருர். அதற்குரிய வழி! அதையும் அவரே கூறுகின்ருர்!

"வீணில் உண்டுகளித் திருப்போரை
நிந்தனே செய்வோம்!"

என்று நமக்குக் கூறுவதோடு விட்டுவிடவில்லே. அவ் வீணர்க்கும்

"கூடும் இன்பம் நாடி வாழும் கூட்டம் ஓர்நாள்
காடு ஏகும் காலம் ஒன்று வந்த போது
ஆழ்கடவுள் ஒடிஞலும் தாக்கும் தாக்கும்—அந்த
ஏழைக் கண்ணீர் கூரிய வாளே ஒக்கும், ஒக்கும்"

என்று இடித்துரைக்கின்ருர். அவருடைய அடிப்படைக் கொள்கை எல்லாம்,

"இல்லை என்ற சொல்லே உலகில்
இல்லையாக வைப்பேன்"

என்பதுதான். இந்த நம்பிக்கை நிறைவேற விழைகின்றார் பாரதி. அதற்குரிய வழியாக உலகிற்கே ஏற்ற உயர்ந்த தத்துவமாகக் கூறுகின்றார்.

"ஒன்று பட்டால் உண்டு வாழ்வு—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே!
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தால்பின் நமக்கெது வேண்டும்!"

ஆம்! அந்த 'ஞானம்' இன்று நமக்கெல்லாம் வேண்டும்—பாரதியின் வழியில் செல்வோம்; நமக்குள்ள வேற்றுமை அனைத்தையும் வெல்வோம். நாடு முன்னேற உழைப்போம் - நலமுற என்றுமே தழைப்போம்.

---

## தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் இசைக் கருத்தரங்கு

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் 1—9—82 அன்று ஓர் இசைக் கருத்தரங்கு நடைபெற்றது. இக் கருத்தரங்கினைப் புதுதில்லி இசை நாடகக் கழகத் தலைவியாகிய திருமதி டாக்டர் கமலாதேவி சட்டோபாத்தியாயா அவர்கள் தொடங்கி வைத்தார்கள். தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் தலைமை தாங்கினர். தமிழக முதல்வர் மாண்புமிகு ம.கோ. இராமச்சந்திரன் அவர்கள் தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்குப் பரிசாக வழங்கிய வீணையை, வீணைப்போட்டி நடத்தி அதில் முதலிடம் பெற்றவர்க்குப் பரிசாக வழங்குவதெனத் திட்டமிடப்பட்டது. அதன்படி 26—8—82 அன்று நடைபெற்ற வீணைப் போட்டியில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் இசையில் முதுகலை பயிலும் மாணவி செல்வி கே. சரசுவதி முதன்மைபெற்று அப் பரிசினைப் பெற்றார். இப் பரிசளிப்பு விழா 27—8—82இல் நடைபெற்றது. திருமதி கமலாதேவி சட்டோபாத்தியாயா அவ் வீணையை வெற்றிபெற்ற மாணவிக்குப் பரிசாக வழங்கினர். இவ் விழாவினையொட்டி, கலைமாமணி திருமதி சேலம் செயலட்சுமி அவர்களின் இன்னிசையரங்கும், தருமபுரம் சுவாமிநாதன் அவர்களின் தேவார இசையரங்கும், ஜி. அரங்கநாதன் குழுவினரின் திவ்யப் பிரபந்த இசையரங்கும் நடைபெற்றன.

# திருச்சி திருவானைக்கா கோயிலில் சங்கராச்சாரியார் சிலையா ?

சங்கராச்சாரியார் சிலை எதிர்ப்புக் குழுத் தலைவர் முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம், துணைத் தலைவர்கள் - க, அப்புலிங்கம், ப. மூக்கப் பிள்ளை, செயலாளர்கள் – சொ. கிருட்டிணன், சாமி. மணிவாசகம், ப. சுப்பிரமணியம், ஆ. சோமசுந்தரம் ஆகியோர் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது.

"அகில அண்டங்களையும் ஈன்று அகிலாண்ட நாயகி என்று பெயர் பெற்று மிகுந்த ஆற்றலுடன் விளங்கும் அன்னை வீற்றிருக்கும் இடம் இத் திருக்கோவில் ஆகும்.

சிவாகம விதிப்படி அமைந்து சைவசமய முறைப்படி வழிபாடு நடைபெறுவதற்குரிய திருச்சி நகர சைவசமயப் பெருங்கோவிலாக விளங்குவதும், ஐம்பூதங்களுமாக விளங்கும் சிவபெருமான் நீராக விளங்குமிடமும் இதுவேயாகும்.

திருக்கோவிலில் வீடுபேறு அடைந்த சைவசமய நாயன்மார்களுக்கு மட்டுமே சிலைவைத்து வணங்குவது மரபு. புறச்சமய ஏகான்மவாதிகட்கு அது மரபன்று; அதற்குரிய இடம் வேறு.

சைவசமயத்தவரல்லாத சங்கராச்சாரியார் உருவச்சிலை ஒன்றை சைவசமயப் பெருங்கோயிலாகிய திருவானைக்காத் திருக் கோவிலில் அமைக்கச் சிலர் முயன்றுகொண்டு இருப்பதாகத் தெரிய வருகிறது. இது உண்மை யாகுமானால் பெரிதும் வருந்தத் தக்கதாகும்.

இச்செயல் அமைதியாக இருக்கின்ற திருச்சி நகரில் சாதிச்சண்டை, சமயச் சண்டைகளைக் கிளப்பி "மண்டைக்காடு" ஆக "மீனாட்சிபுரம்" ஆக ஆக்கிவிடுமோ என அஞ்ச வேண்டியுள்ளது.

ஆகவே, இந்தத் தவறான செயலைச் செய்து இத் திருக்கோவிலின் தூய்மையைக் கெடுக்காது இருக்குமாறு, சங்கராச்சாரியார் சிலையை இத் திருக்கோவிலில் வைக்க எண்ணியிருக்கும் அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

மேலும் முயன்று இவர்கள் சிலையை வைக்க முன் வருவதானால் அதற்குத் திருக்கோவில் அறங்காவலர் குழு அனுமதி அளிக்கக் கூடாது என்றுங் கேட்டுக் கொள்கிறோம்.

இதையும் மீறிச் சிலை அமைக்கின்ற நிலை வருமானால் இந்து சமய அறநிலையத்துறை இக் கொடுஞ்செயலைத் தடைப்படுத்த வேண்டுமென வேண்டிக் கொள்கிறோம்.

எல்லாவற்றையும் மீறிச் சைவ சமயத்தவரல்லாத மனிதர் சிலையைச் சைவ சமயப் பெருங்கோவிலில் அமைக்க முன் வருவார்களானால் எதிர்ப்புக் குழுவும், திருச்சி - திருவானைக்கா நகரப் பொதுமக்களும் அடங்கிய சைவசமயப்படை இதைத் தடுத்து நிறுத்தும்.

அத்தகைய விரும்பத்தகாத போராட்டம் ஒன்றை இத் திருத்தலத்தில் ஏற்படுத்திவிட வேண்டாம் எனச் சிலை அமைக்க முயல்பவர்களுக்கு இதன் மூலம் எச்சரிக்கை செய்கிறோம்,"

இவ்வாறு முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் எச்சரிக்கை விடுத்துள்ளார்.

———

# திரு. ஏ. பி. சி. வீரபாகு மறைவு

தூத்துக்குடி பெருமக்களுள் ஒருவரும், முன்னாள் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவரும், திருநெல்வேலி மாவட்ட காங்கிரஸ் செயற்குழுத் தலைவருமாயிருந்த திரு. ஏ. பி. சி. வீரபாகு அவர்கள் 11—8—82 அன்று தமது 67ஆவது அகவையில் சென்னை தனியார் மருத்துவ விடுதி யொன்றில் இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தி அறிந்து வருந்து கிறோம்.

5—5—1915இல் தோன்றிய இவர், 1942ல் தூத்துக்குடியில் கூட்டுறவு நிறுவனம் தோன்றியபோது அதில் பங்குகொண்டதன் மூலம் பொதுவாழ்வில் ஈடுபடலானார். இவர் ஒரு சிறந்த நாட்டுப் பற்றாளர். காங்கிரஸ் இயக்கத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். இவர் தமிழ் நாட்டுக் காங்கிரசின் தலைவராகச் சிலகாலமும், நெல்லை மாவட்டக் காங்கிரஸ் செயற்குழுத் தலைவராகவுமிருந்து பல அரிய பணிகளை ஆற்றி யுள்ளார். 1957க்கும் 1967க்கும் இடைப்பட்ட காலத்தில் இரண்டு முறை தமிழ்நாடு சட்டப்பேரவை உறுப்பினராக இருந்திருக்கிறார்.

கூட்டுறவுத் துறையில் இவர் பேரீடுபாடு கொண்டவர். திருநெல் வேலி மாவட்ட மையக்கூட்டுறவு நிறுவனத்தில் 1948 முதல் 1971வரை தலைவர் பொறுப்பினை ஏற்று அதனைத் திறம்பட நடத்திவந்தார். அத் துடன் கல்வித்துறையில் இவர் ஆற்றிய பணிகளும் மிகப்பல. 1947ல் தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரியைத் தோற்றுவித்தும், அதன் செய லாளராக இருந்தும் இவர் ஆற்றிய பணிகள் அளப்பில. நூலக ஆணைக் குழுத் தலைவராகவும் சிலகாலம் பணியாற்றியுள்ளார். தட்சிணபாரத இந்தி பிரசார சபையின் துணைத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். தூத்துக்குடித் துறைமுகப் பொறுப்புக் குழுவில் 1948 முதல் 1950 வரையில் உறுப்பினராக இருந்தார்.

1955ல் வ. உ. சி. ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியை நிறுவினார். 1965 முதல் 1971 வரை தென்னிந்திய வங்கியின் தலைவராக இருந்தார். இவருக்கு மகள் ஒருவரும், ஆண் மக்கள் அறுவரும் உளர். மறைந்த இப் பெருமகனாருக்குப் பெருமை சேர்க்கும் வகையில் இவர் மறைந்த அன்று தூத்துக்குடியில் வ. உ. சி. கல்லூரி உட்பட, வ. உ. சி. ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, ஏ. பி. சி. மகாலக்குமி பெண்கள் கல்லூரி, சுப்பையா வித்யோதயா மேனிலை ஆண்கள் பள்ளி, எஸ். ஏ. வி. பள்ளி ஆகியன மூடப்பட்டிருந்தன.

காங்கிரசில் இவர் கொண்டிருந்த ஈடுபாட்டின் காரணமாக இவருக்கு இந்திய மாநிலங்களில் ஒன்றின் ஆளுநர் பதவி அளிக்கப்படும் வாய்ப்பு இருந்தும் சூழ்நிலை காரணத்தால் அவ்வாய்ப்பு கிட்டாமற் போயிற்று என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

திரு. பிள்ளை அவர்கள் நம் கழகப் பங்காளிகளுள் ஒருவராவார். கழகத்திடமும் அதன் ஆட்சியரிடமும் பற்று மிக்குடையவர். 14—9—67ல் திருநெல்வேலியில் கழகத்தின் திருவரங்க நிலையத் திறப்பு விழா நடந்தபோது அதில் பங்குகொண்டு கழகப் பணிகளைப் பாராட்டினார். இத்தகைய நல்லாரின் மறைவு அரசியல் உலகிற்கும், கல்வித்துறைக்கும் பேரிழப்பாகும். மறைந்த பிள்ளையவர்களின் குடும்பத் தார்க்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

———

# திரு. வி. க. வாழ்க்கையில் நினைத்தற்குரிய நிகழ்ச்சிகள்

## (1883—1953)

1883—ஆகஸ்ட்டு 26இல் தோற்றம்

1891—1898 வரை கல்வி பயிலல் (மெற்றிக்குலேஷன் வரை)

1901—1906: கதிரைவேற் பிள்ளையிடம் தமிழ் பயிலல்

1905 இல் தந்தையார் மறைவு

1907—1908 ஸ்பென்சர் கம்பெனியில் எழுத்தராய்ப் பணியாற்றல்

1910—1916: ஆயிரம் விளக்கு வெஸ்லியன் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றல்

1912: செப்டம்பர் 13ல் கமலாம்பிகை அம்மையாரை மணத்தல்



1916: வெஸ்லி கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராகப் பொறுப் பேற்றல்

1917: திசம்பர் 7ல் 'தேசபக்தன்' இதழாசிரியராதல்.

1918: சென்னைத் தொழிலாளர் சங்கம் தோன்றுதலும் திரு. வி. க. துணைத் தலைவராதலும்

1918—செப்டம்பர் 1ல் வாழ்க்கைத் துணைவி கமலாம்பிகை அம்மையார் மறைவு

1920 தேசபக்தன் ஆசிரியர் பதவியிலிருந்து விலகல்.

1920 அக்டோபரில் 'நவசக்தி' இதழ் தொடங்குதல்

1928 அகடோபரில் தமையனர் உலகநாதர் மகன் பால சுப்பிரமணியன் மறைவு

1943 ஆகஸ்ட்டு 24ல் அறுபதாம் ஆண்டு நிறைவு

1943 திசம்பர் 27, 28, 29 மதுரை சைவ சித்தாந்த மகாசமாச ஆண்டு விழாவில் தலைமை ஏற்றல்

1947: பக்கிங்காம் ஆலை வேலை நிறுத்தம்; தொழிலாளர் சங்கத் தலைமைப் பொறுப்பினை ஏற்றல்

,, ஜுன் 9ல் இல்லத்தில் சிறைப்பட்டிருத்தல்

,, திசம்பர் 7 இல் விடுதலை பெறுதல்

1953: ஆகஸ்ட்டு 24 முதல் செப்டம்பர் 16 வரை தமிழகமெங்கும் 70ஆம் ஆண்டு நிறைவு விழாக் கொண்டாடப் பெறுதல்

1953 செப்டம்பர் 17ல் இறையடி சேர்தல்

———

# செய்திகளும் குறிப்புகளும்

## திரு. வி. க. நூற்றாண்டு தொடக்கவிழா

தமிழ்நாட்டரசின் சார்பில் தமிழ்த் தென்றல் திரு. வி. க. நூற்றாண்டுவிழா ஆகஸ்ட்டுத் திங்கள் 28, 29ஆம் நாள்களில் சென்னை, கலைவாணர் அரங்கிலும், வெஸ்லி மேனிலைப் பள்ளித் திடலிலும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது.

28 - 8 - 82 அன்று நடைபெற்ற விழாவில் ஆளுநர் மேதகு சாதிக் அலி அவர்கள் தொடக்கவுரை ஆற்றினர். அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு வீரப்பன் அவர்கள் விழாத் தலைமை ஏற்றனர். முன்னாள் முதல்வர் எம். பக்தவத்சலம், முன்னாள் நடுவணரசின் அமைச்சர் சி. சுப்பிரமணியம், தவத்திரு. சுந்தர சுவாமிகள், திருமதி சௌந்திர கைலாசம் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர். மைய அரசின் பாதுகாப்புத்துறை அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் அவர்கள் திரு. வி. க. அவர்களின் திருவுருவப் படத்தினைத் திறந்துவைத்தார்.

29 – 8 – 82 அன்று மாண்புமிகு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் திரு வி. க. கருத்தரங்கம் நடைபெற்றது. மாண்புமிகு அமைச்சர் கா. காளிமுத்து அவர்கள் தொடக்கவுரை நிகழ்த்தினர். பேராசிரியர்கள் அ. மு. பரமசிவானந்தம், அன்பு கணபதி, கு. இராசவேலு, தவத்திரு. ஊரன் அடிகள், டாக்டர்கள் ந. சஞ்சீவி, நா. பாண்டுரங்கன், சரசுவதி இராமநாதன், திரு. சிறுவை மோகனசுந்தரம் ஆகியோர் விழாவில் பங்குகொண்டனர்.

28, 29ஆம் நாள்களில் இராயப்பேட்டை வெஸ்லி மேனிலைப் பள்ளியில் தொழிலாளர் திருநாள் சிறப்புக் கூட்டங்கள் நடைபெற்றன. அவற்றில் மாண்புமிகு அமைச்சர்கள் கே. ஏ. கிருட்டிணசாமி, இரா. நெடுஞ்செழியன், இராகவானந்தம், டாக்டர் ம. பொ. சி., டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம், குன்றக்குடி அடிகளார் மற்றும் அறிஞர் பலர் பங்குகொண்டனர். மாண்புமிகு முதல்வர் எம். ஜி. ஆர். அவர்கள் திரு. வி. க. அவர்களின் திருவுருவச் சிலையினைத் திறந்துவைத்துச் சிறப்புரை ஆற்றினர்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-ருசு, ருகூஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | சீனி விசுவநாதன், சென்னை | 51—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | டாக்டர் வி. பி. தேவதத்தா பி. எச். டி., குற்றாலம் | 78—00 |
| ,, | டாக்டர் வி. ஜி. கோபாலகிருட்டிணன், சிங்கப்பூர் | 100—00 |
| ,, | விசாகநம்பி, சென்னை-1. | 5—00 |

———

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட்.

# கழகப் புதிய வெளியீடுகள்

## திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள்

தமிழ்த்தென்றல் திரு. வி. கலியாணசுந்தரனாரின் தன் வரலாறு, கழக வழி இரண்டாவது பதிப்பாக வெளிவந்துள்ளது. திரு. வி. க. அவர்களின் வாழ்வாங்கு வாழ்ந்த வரலாற்றினை, அவர்தம் நூற்றாண்டுவிழா நடைபெற்றுக்கொண்டிருக்கும் இவ் வேளையில் தமிழர் ஒவ்வொருவரும் படித்தறியவேண்டியது மிக மிக இன்றியமையாததாகும். இவ் வரலாற்றில் தமிழ்த்தென்றலின் இளமைப்பருவம், கல்வி, அரசியல், சமுதாய வாழ்வு, தொழிலாளர் இயக்கத்தில் அவர் கொண்டிருந்த ஈடுபாடு, சமயத்துறையில் அவர் கொண்டிருந்த பொதுநோக்கு, சீர்திருத்த ஆர்வம், காந்தி அடிகளின் கொள்கையில் அவர் கொண்டிருந்த பற்று, இன்னபிற செய்திகள் மிக அருமையாக—எல்லாரும் படித்துப் பயன்பெறும்வகையில் எழுதப்பெற்றுள்ளன. இந்நூல் இக்கால இளைஞர்கட்கு—சிறப்பாகப் பொதுவாழ்வில் ஈடுபடுவோர்க்கு நல்லதொரு வழிகாட்டியாக விளங்குகிறது. தமிழர் இல்லங்கள் தோறும்—பொது நூலகங்கள்தோறும் இருக்கவேண்டிய சிறந்த வரலாற்று நூல். ஒரே கட்டு-அழகிய பதிப்பு. விலை ரூ. 50 00

## The Dravidian Element in Indian Culture

### (English)—Dr. Gilbert Slater

இந்திய நாகரிகம் என்பது பல சமயத்தார்க்கும் உரிய ஒரு கலப்பு நாகரிகமாக இருந்தபோதிலும் அவற்றின் அடிப்படையில் ஆரிய நாகரிகமும், திராவிட நாகரிகமுமே சிறப்பாகக் காணப்படுவனவாகும். அவற்றுள் மிகத் தொன்மையானது திராவிடநாகரிகமே என்பதும், ஆரிய திராவிடநாகரிக வேறுபாடுகளும், திராவிட நாகரிகத்தின் சிறப்புகளும் இந்நூலில் மிக விளக்கமாக எடுத்துக் கூறப்பெற்றுள்ளன. "ஆரியராவது — திராவிடராவது" என்று துச்சமாகக் கருதி வரலாற்று உண்மைகளை மறைக்க முயல்வோர்க்கு இந்நூல் தக்க விளக்கமளிக்க வல்லது. இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்புகள் எங்ஙனமெல்லாம் கலந்துள்ளன என்பதை அறியவிழையும் தமிழ் அறியாப் பிறமொழியாளர் புரிந்துகொள்ளும் வகையில் ஆங்கிலத்தில் எழுதப்பெற்றுள்ள இந்த அரிய வரலாற்று நூல் நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய சிறந்த நூலாகும். அழகிய குறைந்த விலைப் பதிப்பு.

விலை ரூ. 18 00

**இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு** (தமிழ்ப் பதிப்பு)
– கா. அப்பாத்துரையார் விலை ரூ. 10 00

அப்பர் அச்சகம், சென்னை-1.